உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



| தொகுதி | சித்திரபானு௵ ஆடிமீ கஉ | பகுதி |
|---|---|---|
| 28 | 1942௵ ஜூலைமீ 16உ | 1 |

## கடவுள் வணக்கம்.

நீறுதாங்கிய திருநுதலானை நெற்றிக்கண்ணனை
நிரைவளை மடந்தை
கூறுதாங்கிய கொள்கையினானைக் குற்றமில்லியைக்
கற்றையஞ் சடைமேல்
ஆறுதாங்கிய அழகனை அமரர்க்கு அரிய சோதியை
வரிவரால் உகளும்
சேறுதாங்கிய திருத்தினைநகருள் சிவக்கொழுந்தினைச்
சென்றுஅடை மனனே. (1)

பிணிகொள் ஆக்கை பிறப்புஇறப்புஎன்னும் இதனைநீக்கி
ஈசன்திருவடி இணைகள்
துணிய வேண்டிடில் சொல்லுவன் கேள்நீ
அஞ்சல்நெஞ்சமே வஞ்சர்வாழ் மதில்மூன்று
அணிகொள் வெஞ்சிலையால் உகச்சீறும்
ஐயன்வையகம் பரவிநின்று ஏத்தும்
திணியும் வார்பொழில் திருத்தினைநகருள் சிவக்கொழுந்தினை
சென்று அடை மனனே. (2)

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால்
மயலதுஉற்று வஞ்சனைக்கு இடமாகி
முடியுமா கருதேல் எருதுஏறு மூர்த்தியை
முதலாய பிரானை
அடிகள்என்று அடியார்தொழுது ஏத்தும் அப்பன்
ஒப்பிலாமுலை உமைகோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினைநகருள் சிவக்கொழுந்தினைச்
சென்றுஅடை மனனே. (3)

# அருமை பொருள் விளக்கம்

(இ-ள்.) மனமே! வெண்ணீறு பூசிய திருநுதலானை, நெற்றிக்கண்ணனை, வளையல்களை வரிசையாகத் தரித்த பார்வதிதேவியை இடப்பாகத்தில் வைத்த அர்த்தநாரீஸ்வரனை, புனிதமூர்த்தியை, கற்றையான அழகிய சடைமீது கங்காதேவியை தாங்கிய அழகப்பிரானை, தேவர்கள் காண்பதற்கு அரிய அருட்சோதியை, வரிகளையுடைய வரால்மீன்கள் புரளும் கழனிகள் நிறைந்த திருத்தினை நகரில் எழுந்தருளி யிருக்கும் சிவக்கொழுந்தினைத் தஞ்சமாகச் சென்று அடைவாயாக; (எ-று.) (1)

(இ-ள்.) மனமே! நோய் கொண்ட தேகம், ஜனனமரணம் என்னும் துன்பங்களை நீக்கி இறைவன் திருவடித்தாமரைகளை அடைய வேண்டுமானால், ஒருவழி சொல்கிறேன்; நீ கேட்பாயாக. நெஞ்சமே! அஞ்சாதே! வஞ்சக அரக்கர்கள் வாழும் திரிபுரங்களும் நீசாம்பாய் விழும்படியாக அழகிய வெஞ்சிலையால் சிறிய ஐயன் உலகமுழுதும் பரவி நின்று எத்தும் நெருங்கிய பூஞ்சோலை சூழ்ந்த திருத்தினை நகரில் எழுந்தருளி யிருக்கும் சிவக்கொழுந்தினை அடைக்கலமாகச் சென்று அடைவாயாக; (எ-று.)

"பிணிகொள் ஆக்கை பிறப்பு இறப்பு என்னும் இதனை நீக்கி ஈசன் திருவடி இணை" என்னும் அடி, "இருள்சேர் இருவினையுஞ் சேரா, இறைவன் பொருள் சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்னுந் திருக்குறளோடு ஒப்பு நோக்கத் தக்கது. (2)

(இ-ள்.) மனமே! வாள்போல் கூரிய கண்களையுடைய மங்கையர் மீது மையல்கொண்டு வஞ்சனை முதலிய கொடிய குணங்களுக்கு இலக்காமாகி அற்பாயுளாக மடியக் கருதாதே! இடபாரூடரான சிவமூர்த்தியை, பிரம்ம விஷ்ணு ருத்திரர் மூவர்க்கும் மேலான முழுமுதற் பெருமானை அடிகள் என்றும் அடியார்கள் இறைஞ்சிப் போற்றும் அப்பன் ஞானப்பால் பொழியும் கொங்கைகளையுடைய ஒப்பில்லாத உமாதேவிக்கு நாயகனை, செடி கொடிகள் படர்ந்த காடுகள் மலிந்த திருத்தினை நகரில் எழுந்தருளி யிருக்கும் சிவக்கொழுந்தினை அடைக்கலமாகச் சென்று அடைவாயாக; (எ-று.)

'தையலார் மையலிலே தாழ்ந்து விடக்கூடாது' என்று உலகோர்க்குப் புத்திமதி கூற விரும்புவார் தமது நெஞ்சத்துக்கு அறிவுறுத்துவது போல், "வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால் மயலது உற்று வஞ்சனைக்கு இடமாகி முடியுமா கருதேல்..........சிவக்கொழுந்தினைச் சென்று அடைமனனே!" என்று பாடி யருளினர். (3)




# பேத புத்தி ஏன்?

ஆண்டவன் படைப்பில் மக்கள் அனைவரும் ஒரு தாத்தினரே ; சமமானவர்களே. பொதுவாக, அவர்கள் உருவம், அவயவங்கள், அறிவு, குணம், செயல் அனைத்திலும் ஒரே தன்மை வாய்ந்தவர்களாகவே இருக்கின்றனர். நாடு, மொழி, சமயம் ஆகிய செயற்கைப் பிரிவுகள் அவர்களை வேறு பிரிக்கின்றனவே யொழிய, இயற்கையில் அவர்களிடையே எவ்வித வேற்றுமையும் இல்லை. அப்படி யிருந்தும் மக்களில் ஒரு சிலர் ஆணவம் காரணமாக, சுயநல உணர்ச்சியினால், மக்களிடையே உயர்வு தாழ்வு முதலிய வேற்றுமைகளைப் பாராட்டி வருகின்றனர். மக்கள் சௌகரியத்துக்காக-வாழ்க்கையில் வசதி பெறுவதற்காக—அறிஞர்களால் ஏற்படுத்தப்பட்ட நாடு, மொழி, சமயம் ஆகிய பிரிவுகளே இவர்கள் பேதபுத்தியை வளர்ப்பதற்குப் பெரிதும் துணையாயின. எனவே, அகம்பாவம் காரணமாக மற்றவர்களைவிடத் தாங்களே உயர்ந்தவர்கள், மேலானவர்கள் என்று கருதிய ஒரு சிலர் நாடு வேறுபாட்டைக் காரணமாகக் கொண்டும், மொழி வேற்றுமையைக் காரணமாகக் கொண்டும், சமயப் பிரிவைக் காரணமாகக் கொண்டும் பிறரை இழித்துக் கூறி வரலாயினர் நாடு, மொழி, சமய பேதங் காரணமாக மக்களிடையே ஏற்பட்ட வேற்றுமை காலடைவில் பல்லாயிரம் பேதங்களாக உருக்கொண்டு விட்டது. இப் பேபுதத்தி விபரீதமாய்ப்போய், ஒரே நாட்டில் வாழ்பவர்கள், ஒரே மொழி பேசுபவர்கள், ஒரே சமயத்தைச் சேர்ந்தவர்கள் இடையிலும் பலவிதமான சாதிப்பிரிவுகளை வேரூன்றச் செய்துவிட்டன.

இவ்விதமாக, குணங் குறி செயல்களால் ஒரே தன்மை வாய்ந்த மக்களிடையே பல்வித பேதங்கள் கிளைத்து பல விபரீதங்களை நிகழ்த்தி வருவதைக் கண்கூடாகக் கண்டு வருகிறோம். இன்று மற்றெல்லாப் பிரிவுகளைக் காட்டிலும் மக்கள் பால் ஜாதி யகம்பாவமும் நிறத் திமிரும் மிகுந்த ஆதிக்கங்கொண்டு இருக்

கின்றன. இந்த ஆணவ வுணர்ச்சி மக்களை எவ்வளவு தூரம் அலைக் கழித்து வருகின்றன என்பதை அளவிட்டுச் சொல்ல முடியாது. பேராபத்தான காலத்திலும் இப் பேதபுத்தி மக்களை விட்டுப் போகவில்லையென்றால் அதிகஞ் சொல்வானேன்!

இன்று உலக முழுதும் யுத்த நெருக்கடியும் ஆபத்தும் பரவியிருக்கின்றன. இப்பேர்ப்பட்ட உயிருக்கே போராடும் படியான ஆபத்தான நிலைமையிலும் கூட மேனாட்டார் நிறத் திமிரையும் ஆணவபுத்தியையும் சிறிதும் விடாமல் பாராட்டி வருகிறார்கள் என்றால் அவர்கள் மனோபாவத்தை என்னென்பது!

இவ் விபரீத மனோபாவத்துக்குச் சமீபத்தில் இரு உதாரணங்கள் கிடைத்திருக்கின்றன. முதலாவது, இந்திய ஹைகமிஷனர் ஸர். அஸீஸுல் ஹக் சமீபத்தில் இங்கிலாந்தின் வடமேற்கு நகரங்களில் சுற்றுப் பிரயாணஞ் செய்து பல்வேறு தொழிற்சாலைகளில் பயிற்சி பெற்று வரும் இந்திய பெவின் சிறுவர்களைப் பார்வையிட்டார். மாஞ்செஸ்டரிலும், லிவர்பூலிலும் இந்தியர்கள் விருந்தளித்தனர். மாஞ்செஸ்டர், செஸ்டர் நகரங்களின் லார்டு மேயர்களும் விருந் தளித்தனர். லிவர்பூலில் பிரிட்டிஷ் கவுன்ஸில் நகரசபை) ஸர். ஹக்குக்கு உபசாரப் பத்திரம் வாசித்து அளித்தது. லார்டு மேயர் ஸர். ஹக்கை வரவேற்று உபசரித்தார். ஆனால், அவர் தம் வர்க்கத்துக்கே உரிய ஆணவத்தை வரவேற்பின் போது காட்டி விட்டார்.* அவர் ஸர். ஹக்கை வரவேற்று பேசுகையில், "பல மதங்களைப் பின்பற்றும், பல மொழிகளைப் பேசும் (சுமார் 200 இருக்கலாம்) மக்களுள்ள இந்தியா போன்ற தேசத்திற்குப் பிரதிநிதித்வம் வகிப்பதென்றால், ஸர். அஸீஸின் வேலை மகத்தான தாகும்" என்று குத்தலாகக் கூறினார். இக் குறும்புப்பேச்சு நமது ஸர். ஹக்குக்கு ஆத்திரத்தைக் கிளப்பி விட்டது. ஆகவே, அவர் லார்டு மேயரின் ஆணவ மொழிக்குச் சரியான சாட்டை கொடுத்தார். "ஆம். இந்தியாவில் வேற்றுமைகள் இருக்கின்றன. உலகில் எந்த நாடுதான் வேற்றுமைகளின்றி இருக்கிறது? எங்கள் நாடு பெரிது. ஆகவே, அதில் இத்தனை மதங்களும் மொழிகளும் இருப்பது இயற்கையே" என்று அவர் ஆணித்தரமாகப் பதிலளித்தார்.

அதன் பின் ஸர். ஹக் ஒரு பத்திரிகை நிருபருக்கு அளித்த பேட்டியில், "நான் ஒரு இந்து என்ற முறையிலோ முஸ்லிம் என்ற ஹோதாவிலோ இங்கு வரவில்லை. ஆனால், இந்தியன் என்ற முறையில் இந்தியாவின் பிரதிநிதியாக வந்திருக்கிறேன். பற்பல மதங்களும் ஜாதிகளும், மொழிகளும் கொண்ட தேசமாக இந்தியாவை வருணிப்பது இந்நாட்டில் ஒரு வழக்கமாகப் போய்விட்டது. காமன்ஸில் இந்தியா மந்திரி தான் பேசட்டும்; அல்லது

லார்டு மேயராகத்தான் இருக்கட்டும். இந்தியாவின் வேற்று களை காது புளித்துப் போகும் வரை பலபட பேசுகிறார் என்று கூறி, பிரிட்டிஷ் மக்களின் பேத புத்தியை வெளிப் படுத்தினர்.

இரண்டாவது பிண்ட் டாடாகான் ஸப் டிவிஷனல் மாஜிஸ்திரேட்டான ஸ்ரீ கே. டி. ரோஜர்ஜ் ஒரு வழக்கின்மீது அளித்த தீர்ப்பில் இந்தியர்களை இழிவுபடுத்திக் கூறியிருப்பதாக தகவல் வெளி வந்திருக்கிறது. இந்த மாஜிஸ்திரேட்டின் தீர்ப்பிலுள்ள விபரீத வார்த்தைகளை ஜீலம் செஷன்ஸ் ஜட்ஜ் ஆட்சேபித்ததன் மீது லாகூர் ஐகோர்ட்டு நீதிபதி ஸ்ரீ டின் முஹமது மேற்படி ஆட்சேப வாசகங்களை, ஜட்ஜ்மெண்டிலிருந்து எடுத்துவிடும்படி உத்திரவிட்டார். மேலும் அவர், இந்த ஜட்ஜ்மெண்டில் மற்றொரு ஆட்சேபகாமான பகுதி இருப்பதைக் கண்டு பிடித்து அதையும் எடுத்துவிடும்படி உத்திரவிட்டார். மேற் குறிப்பிட்ட ஆட்சேப காமான வாசகமாவது, "இந்த வழக்கின் விவரங்களை நான் நன்ருக விசாரித்தேன். தாங்கள் நாகரிக மக்கள் என்று எண்ணுவதற்கு உரிமை யளிக்கக்கூடிய பொது ஜனப் பொறுப்பையும் ஒற்றுமையையும் இந்தியர்கள் அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டுமானுல், இந்த வழக்கில் காணப்படும் பல அம்சங்கள் முறறுப்பெற வேண்டும்."

இவ் வாசகத்தைப் பற்றி லாகூர் ஹைகோர்ட்டு நீதிபதி வியாக்கியானஞ் செய்கையில் "இந்த மாஜிஸ்திரேட்டின் அபிப் பிராயப்படி, (1) இந்தியர்கள் பொது ஜனப் பொறுப்பு உணர்ச்சியை விருத்தி செய்துகொள்ள வில்லை. (2) அவர்களுக்கு ஒற்றுமை இல்லை. (3) தாங்கள் நாகரிக மக்கள் என்று அவர்கள் சொல்லிக்கொள்ள நியாய மில்லை என்பதாக இதிலிருந்து அர்த்த மாகிறது. சுருங்கச் சொன்னுல், இது போன்ற வாசகங்களை உபயோகிப்பதற்கு அவசியமில்லை; அது நியாயமு மில்லை. அவரது சொந்த அபிப்பிராயம் இவ்விதமாக இருந்தாலும், அதை ஜட்ஜ்மெண்டுகளில் புகுத்தக்கூடாது என்பதை அநுபவத்திலேயே தெரிந்துகொண் டிருக்கவேண்டும். இதுபோன்ற வாசகங்களை வெளியிடுவது மனிதவர்க்கத்தின் ஐந்தில் ஒரு பாகமாக இருக்கும் லட்சக் கணக்கான மக்களின் மனதைப் புண் படுத்துவதாகும். அதுவும் இப்பொழுது மாகாண சர்க்கார்களை இந்திய மந்திரிகளே மிகச் சிறந்த முறைகளை நடத்துகிறார்கள்.

" அரசாங்கத்தின் இதர பெரிய பெரிய உத்தியோகங்களிலும் இந்தியர்கள் மிக்க சாமர்த்தியத்துடன் வேலை பார்த்து வருகிறார்கள். மத்திய சர்க்காரை இந்தியமய மாக்கவேண்டும் என்று ஏற்கனவே யோசனைகள் இருந்து வருகின்றன. நாகரிக

மக்கள் என்று சொல்லிக்கொள்ள யோக்கியதை இல்லாதவர்கள் என இவர் யாரைச் சொன்னாரோ அவர்கள் தான் இப்பொழுது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைப் பாதுகாக்கவும் உலகத்தின் ஒவ்வொரு மூலையிலும் பிரிட்டிஷ் கொடிகள் பறக்கவும் தங்கள் விலையுயர்ந்த ரத்தத்தைச் சிந்திக்கொண் டிருக்கின்றனர்.

"இவ்வளவு பெரிய உலகத்தில் நாகரிக நிலைமை எங்கும் ஒரே மாதிரியாக இருக்காது என்று இங்கு எடுத்துக் கூற வேண்டிய அவசியமில்லை. இவ் வுலகத்திலுள்ள மற்ற மக்கள் 'நாகரீக மக்கள்' என்ற பட்டத்தைப் பெறுவதற்கு வெகு கால முன்பே இந்தியர்கள் நாகரிக மக்கள் என்று பிரபலப்பட்டு விட்டார்கள். *பிரிட்டிஷ் சர்க்காரிடத்தில் அவர்கள் எவ்வளவு உண்மையுடனும் பக்தியுடனும் இருக்கிறார்களோ அவ்வளவு ஒற்றுமையுடனும் அவர்கள் இருக்கிறார்கள் பொது ஜனப் பொறுப்பு உணர்ச்சியில் அவர்கள் யாருக்கும் பின் வாங்கினவர்களில்லை.* சில அநாகரிக மனிதர்கள் இந்தியாவில் மாத்திர மல்லாமல் உலகத்திலுள்ள எல்லா தேசங்களிலும் இருக்கிறார்கள். இவர்களைக் கொண்டே ஒரு தேச மக்களை மதிப்பிட முடியாது" *என்று கூறினார். அத்துடன், அவர், "ஒரு விருப்பத்தை வைத்துக்கொண்டு அதிலிருந்து பொதுவான தத்துவங்களைக் கண்டு பிடிக்க முயற்சிக்கக் கூடாது" என்று மாஜிஸ்திரேட்டுக்குப் புத்தி கூறினார்.*

*இவ்விதம் லிவர்பூல் லார்டு மேயரும், பிண்ட் டாடாகான் சப் மாஜிஸ்திரேட்டும் இந்தியாவைப் பற்றியும் இந்தியர்களைப் பற்றியும் கொண்டுள்ள விபரீத மனோபாவத்துக்கு அடிப்படையான காரணம் உலகிலேயே தாங்கள் உயர்ந்த ஜாதியார் என்ற அகம்பாவமும் நிறத்திமிருமேயாகும். ஒரு பொறுப்புள்ள உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கும்-நடு நிலைமையாக இருந்து நிலைமையைக் கவனிக்கவேண்டிய லார்டு மேயரையும் சப்மாஜிஸ்டிரேட்டையும் போன்றவர்களே இவ்விதக் குறுகிய மனோபாவம் கொண்டிருப்பார்களானால், மற்றச் சாதாரண மக்கள் நிலைமை என்ன? இவ்விதம் ஆங்கிலேயர் போன்ற வெளிநாட்டார் இந்தியர்களாகிய நம்மைப் பலவகையிலும் கேவலப்படுத்தி வருகையில், நம்மவர்களில் ஒரு சிலர் 'நாங்கள்தான் உயர்ந்த சாதி; அவர்கள் தாழ்ந்த வகுப்பார்; நாங்கள் தனி சாதியார்' என்று பேதம் பாராட்டி வேற்றுமையை வளர்க்கின்றனர். "இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே பேதங்கள் அடிப்படையானவை நாகரிகம், மொழி, இலக்கியம், ஓவியம், சிற்பம், சட்டம், பழக்க வழக்கங்கள், பெயர், மனப்பான்மை யாவற்றிலும் முஸ்லிம்கள் தனி ஜாதியினர்" என்று முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் ஜின்னா*

(16-ம பக்கம் பார்க்க)

# புத்தாண்டு வாழ்த்து



வாழி! வாழி! வளர்தமி ழுலகில்
வாழி ஆனந்த போதினி வாழி!
தொல்சீர் உலகோர் தோன்றுநாள் தொட்டுப்
பல்சீர் பெருகப் பரவுமெந் தமிழைத்
திண்மைசேர் தமிழர் செல்வமென் றிசைத்துக்
கண்ணிய வழியெலாங் காட்டும் ஆனந்த
போதினி யென்னும் புகழ்மலி பொலிவே!
மேதினி தன்னில் பேதமை நீக்கி
* 'ஒன்றில் இரண்டை யோர்ந்து மூன்றை
வென்று யடக்கி நான்கைப் பெற்றே'
யின்புற வாழ இன்னருள் சார்ந்து
தேன்மழை பொழியும் தீஞ்சுவை முகிலே!
அறமுணர் தமிழர் அகமெலாங் குளிரத்
திறமுடன் கலையெலாம் திரட்டிப் போதனை
செயுநின் றிறத்தைச் செப்புத லெளிதோ?
உயர்முனிசாமி முதலியார் என்னும்
தொல்சீர் புகழோன் தோற்றிய மணியே!
நல்துரைக் கண்ணன் நவிலரும் புலமையால்
எழில்சேர் அணியை இன்பாய் ஏற்று
வழிபல சென்று வான்புகழ் பரப்பும்
வாழி ஆனந்த வடிவே!
வாழி பல்லாண்டு வாழிவா ழியவே!

[* ஒன்று—ஆத்மா; இரண்டு—பாவ புண்ணியம்; மூன்று—ஆணவம், மாயை, கன்மம்; நான்கு—அறம், பொருள், இன்பம், வீடு.]

—மு. த. வேலாயுதம், புதுவை.

**2**

இமிழ்திரைவெண் கடற்புவிமேல் இன்புகழ்சேர்
சென்னைநகர் இனிது தோன்றித்
தமிழணங்கின் மடியின்மிசைத் தவழ்ந்துலகர்
மனத்தின்மிசைத் தங்குஞ்செல்வீ!
அமிழ்தமெனச் சுவை கொழிக்கும் ஆனந்த
போதினியாம் அணங்கே! நின்றன்
கமழ்தருபுத் தாண்டின்மணம் கவின்றிலகில்
நீடூழி கலந்து வாழி. 1.

உளங்கனிந்தேம், களிசிறந்தேம், உடல் வளர்ந்தேம்,
ஒன்குவகை உற்றேம் அம்மா!!
வளஞ்சிறந்தேம் வாழ்க்கையுறு வகைதெளிந்தேம்
மகிழ்ச்சிமலர் வனமுங் கண்டேம்

ஆனந்தபோதினி

அளவில்தமிழ்ச் சுவைதெருட்டும் ஆனந்த
போதினியெம் அருமைச் செல்வி!
புளகிதங்கொண் டேம்நின்று புத்தாண்டுப்
புதுமலர்ச்சி போர்த்த போழ்தே. 2.

R. கணபதி, அண்ணாமலை நகர்.

3

உலகுக் கொருமுதல் வன்மலை மாமகள்
கொழுநன் உளமதனில்
உன்னிடும் அடியவர் குறைதீர் சங்கரன்
மதிசேர் உயர்புனிதன்
நிலவைச் சடைதனி லேபணி யும்பரன்
அமலன் நீறணிவோன்
நீலபொது வினில்நட மிடுமா னந்தன்
நிறையருள் வருகவே
புலமைக் கலைபர வும்பல கட்டுரை
பொருள்சேர் ஆனந்த
போதினி யெனுநற் பெயருடன் வெளிவரு
புதுமைச் சஞ்சிகையும்
தலைமைப் பதவியை மிக்கும் அதிபதி
தாமும் எந்நாளும்
தாரணி தனில்நல மெல்லாம் உற்றினி
தாய்வாழ் வோங்கிடவே.

க. சிதம்பரம்-பிள்ளை, இராமவர்மபுரம் புதூர்.

4

பூவுலகி னல்லார்கட் புனிதமுற நாதனடி
போற்றி செய்ய
மேவுறுகற் பகமலரை மென்கரத்தால்
கொய்திடுமேன் மாட மோடு
காவுறுபொன் மலரலைக்குங் கடனமருங்கே
பொலிந்தொளிரும் காமர் செய்தல்
மாவுறுதன் னில்மாகு மல்குவள
ஞடன்றிருவு மாண்பாய்ச் சேர்ந்து, 1.

திருமயிலை முதலாகச் சிவனுறை யு
மாலயுங்கட் செவ்வி நோக்கி
அருண்மருவு நீறபுனை அன்பர்குழா
மொடுகலைக ளறிந்தோர் தாமும்
பெருகிநிறைந் தறநகரம் பெயர்ச் சென்னை
தனிற்றங்கி பெட்பாய் வாழும்
அருந்தமிழின் கலையோங்க அவதரித்த
முனிசாமி அறிவோன் றந்த. 2.

## புத்தாண்டு வாழ்த்து

சீலமிகு மானந்த போதினியாஞ்
செல்வனையே திங்க டோறுங்
கோலமுடன் வருகையெதிர் கொண்டுமன
முவந்ததிலே குலவித் தோன்றும்
சாலமிகு மிலக்கியமுந் தகைசீரிக்
கதைமுதலாஞ் சார்ந்து நோக்கிப்
பாலொடுநற் கனிசேர்த்துப் பண்புடனே
சுவைத்திடல்போற் பருகு வாரே. 3.

குறைவுடைய சந்தாவைக் கொடுத்துப்பல்
லாயிரவர் மோதி லாத
அறைந்திடுபல் விடயங்க ளார்வமுடன்
வாசித்தே ஆனந் திப்பார்
நிறைவுடனே யாண்டுசெல நிகர்வெள்ளி
விழாதனையே நீடி யேற்றும்
இறைவனரு ளால்யாண்டு இருபானே
டெட்டுமினி தின்றே பெற்றாய். 4.

இன்னணம்பல் லாண்டுகளு மிவ்வகையாய்ப்
பயனுதவி யிம்பர் தன்னின்
பன்னரிய கற்பகம்போற் பண்புடனே
நிலைத்தினிது பன்னாள் வாழி!
பொன்னனைய ஆனந்த போதினியாஞ்
செல்வனே! நீ புனித மாக
அன்னைதமிழ்த் தொண்டுபுரிந் தானருளா
லீடுழி அமர்ந்தே வாழி. 5.

P. குட்டி முன்சாமிச் செட்டியார், பெரணமல்லூர்.

### 5

அன்பமர் பாவாய் ஆம்தமிழ்த் தேவீ!
ஆனந்த போதினீ! அன்னாய்! வருக!
இருள்மனந் தகற்றும் இறைவீ! வருக!
ஈடில்நின் சீர்த்தி என்றும் ஓங்குக!
உவப்புடன் கற்றோர் உளத்தில் இன்பம்
ஊற்றிடும் நின்றன் ஒண்புகழ் வாழி!
எவ்வமுற் றேங்கும் இன்றமிழ் அன்பீர்!
ஏற்பீர் எழுவீர் இன்றுநம் அன்னையை
ஐயமகற்றும் ஆனந்த போதினி
ஒன்றினைக் கொண்டே உளமகிழ் கொள்வீர்
ஓர்த்தவன் தன்னை உடனே அழைமின்!
ஔவிய மில்சீர் அவள்புத் தாண்டு
வண்கதிர் போலநீ டூழி
வழிவழி மலிந்து வாழி வாழியரோ.

A. K. வசந்தகோகிலம், அண்ணாமலை நகர்.

## 6

பூமகள் வாழ்த்தும் புனிதா வருக!
புகழு மானந்த போதினி வருக!
வருக புத்தாண்டு மகிபா வருக!
மங்கள சாசனு வருக! வருக!
அரிய தொண்டாற்றும் அரசே வருக!
அன்பருள மகிழ் அன்பே வருக!
கலை பல உரைக்குங் கருத்தே வருக!
கௌமார காலங் கடந்தாய் வருக!
தக்கதோர் பருவந் தன்னினை பெற்றாய்
சாற்று காலேழு தான் வயதடைந்தாய்
ஆளுகைப் பேய்க ளல்லலின் போதும்
அற்பசந் தாவோ டவனியி லன்பாய்
திங்க டோறுஞ் சிறப்போ டுலாவுதல்
சிறப்பினுஞ் சிறப்பாஞ் செல்வனே வருக!
முதன்மை யாசிரியாய் முனிசாமி முதலியார்
முன்வந்து உன்புகழ் மொழிதலோர் சிறப்பாம்
எத்தகை சிறப்புனக் கின்பமாய்ச் செய்தனர்
என்றதை இயம்புத லெங்ஙன மியலும்?
இலக்கிய விலக்கண மினிதா யமைத்தார்
இன்பச் சுவையோ டெங்கணும் நிறைத்தார்
யாவ ருளத்திலும் கன்கொடு விளங்க
சுற்றமி னன்பாய் நவின்றனர் பெரியார்
"கரும்போ! கனியோ! கதலியின் ருசியோ!
கனிரசந் தானோ! கற்கண்டோ! தேனோ
யாதோ! வுன்சுவை" யாமென வினவ
யாவரும் புகழ நலமா யுரைத்தனர்
உன்னருந் தொண்டும் உதவியு முலகில்
ஓங்கியே வளர உமையாள் கணவன்
பன்னகா பரனன் பரமனின் சேயன்
வன்னமா மயிலில் வரும் வடிவேலன்
அன்னவன் சோதரன் ஐங்கரன் பாதம்
அன்பொடு வேண்ட ஆண்டருள் புரிவர்
பாரத சேய்களின் பாவ மகற்றுவர்
பரவிய உலகிற் பல்லாண் டுன்புகழ்
வாழ்க நீடூழி! வாழ்கநின் சேவை!
வாழ்க மாநிலம்! வாழ்க வாழ்கவே'

எம். எஸ். ஆதிமூலம், சிலோன்.

# விவசாயம்

(தி. மு. இராஜகோபாலன்.)

மக்கள் 'பணம்' 'பணம்' என்று பறக்கிறார்கள். ஆனால் பணத்தைத் தேடும் முறை தெரியாமல் உத்தியோகம் (பதவி) என்ற புனை பெயரால் அழைக்கப்படும் அடிமைத் தொழிலிலும், 'கண்டிராக்ட்' என்று சொல்லுகின்ற ஒப்பந்த வேலையிலும், 'ஸ்பெகுலேஷன்' எனப்படும் சூது விளையாட்டுகளிலும் லாகிரி வஸ்துக்கள் விற்பனை முதலியவைகளிலும் தான் பெரும்பான்மையாக இறங்கி பணம் சம்பாதிக்க முயல்கிறார்கள். இத்தகைய காரியங்களில் இறங்குபவர்களுள் நூற்றுக்கு தொண்ணூறு பேருக்கு வயிற்றைக் கழுவ போதிய அளவு கூட வருமானம் கிடைப்பதில்லை. அநேகருடைய குடும்பங்கள் சொடித்துப் போவதையும் கண்ணாரக் காண்கிறோம். விரல் விட்டு எண்ணக் கூடிய மிகச் சிலரே இவைகள் மூலமாய் நிறைய வருமான மடைகிறார்கள்.

ஆனால் பிடிவாதத்தோடு உறுதியாய் மனம் வைத்து சரியான வழியில் முயற்சி செய்கிற அனைவருக்கும் பாரபட்சமில்லாமல் அமோகமாய் அளிக்க பூமிதேவி காத்துக் கொண்டிருக்கிறாள். அவள் ஒருத்திக்குத் தான் ஜாதி, மதம், இன்னோரன்ன பிற வித்தியாசங்கள் கிடையாது. உழைத்த மட்டிற்கு பயன் தருகிறாள். ஆனால் அறிவோடு, பொறுமையோடு, பணிவோடு, வழி தெரிந்து பெரு முயற்சி செய்தால் எதிர்பாராத அளவுக்கு மேல் பயன் தருகிறாள்.

அவ்வாறு நாம் அதிகம் உழைத்தும் பயன் குறைவாய்க் கிடைப்பின் ஏன் குறைவாய்க் கிடைத்தது என்பதை பொறுமையோடு சிந்தித்துப் பார்க்க வேண்டும். சளைக்காமல் ஆராய்ச்சிகள் செய்து வர வேண்டும். ஆராய்ச்சி செய்தவைகளை நினைவில் என்றும் வைத்திருக்க வேண்டும். ஆராய்ச்சி செய்வதில் 'போதும் என்ற எண்ணம்' இருக்கவே கூடாது.

ஐரோப்பாவில் மேற்கண்ட வழிகளை அனுஷ்டித்து அரிய பயனை அடைந்து வருகின்றனர். பெல்ஜியம் நாட்டில் பத்து வருடத்து விளைவைச் சராசரி பார்த்ததில் ஒரு ஏகராவில் ஒரு போகத்துக்கு 550 பக்கா கோதுமை விளைந்ததாம். மேற்கண்டது நன்றாக பண்படுத்தாத சாமானிய நில வருமானம். ஆனால் பண்படுத்திய நிலத்திலோ 1134 பக்கா கோதுமை விளைந்ததாம். அந்த நாட்டில் ஒரு சதுர மைலுக்கு 589 ஜனங்கள் இருக்கிறார்கள். 40 வருடங்களுக்கு முன் அவர்களில் 490 ஜனங்களின் உணவு அவர்களது குறுகிய நாட்டிலேயே உற்பத்தி செய்தார்கள் என்றால் அவர்களின் அயர்ச்சியில்லா உழைப்பும் வேளாண்மைத் திறமும் தான் என்னே!

அமெரிக்காவில் நன்றாக வேலை செய்து பத்து வேளாளர்கள் ஒரு ஏகராவில் 1730 படி முதல் 2300 படி வரையில் மக்காச்சோளம் அறுத்தார்கள். சில ஏக்கராக்களில் 31 டன் அதாவது 69,440 ராத்தல் உருளைக் கிழங்கு எடுத்திருக்கிறார்கள்.

டென்மார்க்கில் (Denmerk) ஏக்கராவிற்கு 600 பக்கா கோதுமை விளைகிறது. இந்த நாட்டில் 28 லக்ஷம் ஜனங்கள் தான் இருக்கிறார்கள். சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள் 70 லக்ஷம் ஏக்கர்கள் தான். இந்த சிறிய அளவு பூமியிலிருந்து கடலுடன் போராடி நாலுகோடி பவுன் கிரயமுள்ள உணவுப் பதார்த்தங்கள் உண்டு பண்ணுகிறார்கள். 145 பவுன விலை பெறுமானமுள்ள உணவுப் பொருள்களை ஏற்றுமதி செய்கிறார்கள் என்றால் அவர்களின் ஆராய்ச்சித் திறனையும், சலியா உழைப்பையும், பாராட்டாமல் இருக்கவே முடியாது.

இன்னும் ஒரு உதாரணம் மட்டும் காட்டுவோம். ஜெர்ஸே என்று இங்கிலாந்துக்குச் சொந்தமான ஒரு தீவு உளது. அதிலுள்ள பாறைகள் மலைச் சிகரங்கள் உட்பட அதன் விஸ்தீரணம் 16,000 ஏக்கராவிற்கு மேல் இல்லவே இல்லை. அவற்றுள் 9884 ஏக்கர்கள் தான் பயிரிடுதற்கு யோக்கியமானவை. ஆனால் அத் தீவிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களைக் கணக்கிட்டுக் கூறினால் நம்பவே மாட்டீர்களென்று எனக்குத் தெரியும். நீங்கள் நம்பினாலும் நம்பா விட்டாலும் நான் உள்ளதை உள்ளவாறு கூறியே தீருவேன்.

அந்தத் தீவிலே 44 வருடங்களுக்கு முன் $11\frac{1}{4}$ லக்ஷம் ராத்தல் கொடி முந்திரிப்பழம், 22 லக்ஷம் ராத்தல் தக்காளிப்பழம், 20;000 பவுன் பெறுமானமுள்ள உருளைக்கிழங்கு, 9000 பவுன் விலையுள்ள முள்ளங்கி, 3000 பவுன் விலையுள்ள புஷ்பங்கள், இன்னும் சில்லறை சாமான்கள் 200 பவுன். ஆக வருடத்திற்கு இத் தீவார் லண்டனுக்கு லக்ஷம் பவுனுக்கு மேல் ஏற்றுமதி செய்துள்ளார்கள். இதனோடு இவர்களுடைய நிலங்களில் 7620 மாடுகளும், 900 ஆடுகளும், 3480 குதிரைகளும் போஷிக்கப்பட்டு வந்தன. 44 வருடங்களுக்கு முன் இந்த நிலையில் இவ்வாறிருந்தால் இன்றைய தினம் எவ்வாறு இருக்கும் நாம் ஊகித்தறிய வேண்டியது தான்.

இத்தனைக்கும் மேற் கூறிய பூமிகள் இயற்கை வளம் நிரம்பியவை அல்ல. அநேகம் மிகச் சாமானிய நிலங்கள், நாடும் குளிர்ந்த தேசங்கள், பிரெஞ்சு வேளாளர் பூமிக்கு அடியில் குழாய்கள் போட்டு அவைகளை வெந்நீரால் நிரப்பி பூமியை உஷ்ணப்படுத்துகிறார்கள். மின்சார சக்தியைப் பிரயோகித்து பூமியை மேலும் மேலும் சாரக்கச் செய்கிறார்கள். குத்தகை ஒப்பந்தங்கள் செய்து கொள்ளும்போது, தான் போட்ட உரத்தினால் உயர்ந்த மண்ணையும் வாரிக்கொண்டு போவேன் என்று நிபந்தனை கண்டே தான் குத்தகைக்காரன் நிலக்காரனுக்கு குத்தகைச் சீட்டு எழுதித் தருகிறான். அவ்வளவு தூரத்திற்கு பூமியைப் பண்படுத்துவதில் கருத்தைச் செலுத்துகிறார்கள்.

நம் நாட்டுப் பூமி இவர்களுடைய பூமிக்கு வளப்பத்தில் எந்த வகையிலும் என்னளவுகூட தாழ்ந்ததில்லை. தாமிரபரணி, காவேரி, கிருஷ்ணா, கோதாவரி, கங்கை, ஸிந்து முதலிய திவ்ய நதிகள் பாய்கின்ற பிரதேசங்கள் நீர்வளம், நிலவளம் ஆகியவைகளில் எந்த நாட்டிற்கு இளைத்திருக்கிறது? ஆனால் இவை மாத்திரம் போதுமானால் நாம் பயிர்த் தொழிலில் ஐரோப்பியர்களுக்கும், அமெரிக்கர்களுக்கும் இவ்வளவு பின்னே இருக்க

மாட்டோம். ஆகவே செல்வர் செருக்கிற்கு நிலவளமும் நீர்வளமும மாத்திரம்போதா. குடி வளர்தான் முக்கியமானது. எனவே இனியாகிலும் பிற நாட்டவரைப் போல விவசாயத்தை அறிவாளிகள் இறங்கிச் செய்யவேண்டிய தொழிலாகப் பாவித்து நடத்தல் வேண்டும் உத்தியோகம், உத்தியோகம் என்று பறந்துகொண்டு உள்ள நிலங்களை விற்றும், அடமானம் வைத்தும் பணம் வாங்கி ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் படித்து, பிழைக்கும் வழி தெரியாமல் அலைகிறவர்கள் மேல் நாட்டவர் முறையைத் தெரிந்துகொள்வதற்கு மாத்திரம் போதிய அளவுக்கு ஆங்கிலம் படித்துக்கொண்டு தங்கள் நில புலங்களை விற்காமல் வைத்துக்கொண்டு செவ்வனுற, வகை தெரிந்து விவசாயம் செய்திருப்பார்களேயானால் நம் நாட்டின் செல்வத்தை எவ்வளவு பெருக்கியிருப்பார்கள்? ஆனால் போனதை நினைத்து வருந்துவதில் பயனில்லை. இறந்த கால தவறுதல்களை வருங்கால வளர்ச்சிக்கு அறிகுறிகளாக வைத்துக்கொள்ளுவதே அறிவாளிகளின் இலக்கணம். எனவே நாட்டின் செல்வத்தை வளர்க்க ஆசை கொண்டவர்கள், நாம் மேலே எடுத்துக் காட்டிய மேனாட்டவர் முயற்சியை ஒரு தூண்டுகோலாக வைத்துக்கொண்டு ரஸாயன ஆராய்ச்சிகளில் இறங்கி விவசாயத்தை செவ்வனுற செய்ய முயற்சிப்பார்களாக.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல்வர்.—திருக்குறள்.

## நன்கொடை.

நமது "ஆனந்த போதினி"க்கு இருபத்தெட்டாம் ஆண்டு பிறந்திருப்பதை முன்னிட்டு, பின்கண்ட வாசக நேயர்கள் தங்களாலியன்ற நன்கொடையை அளித்திருக்கின்றனர். இவ்விதம் நம் ஆனந்தன் வளர்ச்சியில் ஆர்வங்கொண்டு வழங்கிய இவ்வன்பர்களுக்கு இறைவன் எல்லா நலன்களும் வழங்கி மகிழ்விக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

V. துப்புசாமி நாயுடு,
சிலோன் காங்கிரஸ் ஆபீஸ், கோடகலா,
சிலோன்.

G. முத்துசாமி ஐயர்,
பெரியேரி, ஆகலூர் போஸ்டு, சேலம்.

T. தங்கவேலு,
தலைவாசல் கிராமம், சேலம்.

சி. வே. ராமைய நாடார்,
அன்னம்பேட்டை கிராமம், மாயவரம்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## 16. 'வெள்ளி' அல்லது 'சுக்ரன்'

நிலவுலகினுக்குப் பலன் நிகழ்த்தும் 'துஜாதி பஞ்சக்கிரகங்க'ளுள் நான்காவதாக வியாழனை அடுத்து வருவது வெள்ளி அல்லது சுக்கிரன் ஆகும். சூர்யனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கோள்களின் வரிசையில் இது இரண்டாவதாக அமைகின்றது. இதன் சுற்றுவீதி பூமியின் சுற்று வீதிக்கு உட்புறத்தே இடம் பெறுகின்றது.

வெள்ளி உலகினை பூமிக்கு உடன்பிறந்த தங்கை (சகோதரி) என்பர். அது பரிமாணத்தில் பூமியை ஒத்ததாக (சற்று சிறியதாயினும்) மதிக்கின்றனர். நேர் குறுக்களவு பூமியின் நேர் குறுக்களவினும் முன்னூறு (300) மைல்களே தான் குறைந்ததாம். அதன் ஈர்க்குஞ் சக்தி பூமியினதை விட பதினைந்து சதமானமே குறைந்ததாம். அதாவது பூமியின் இழுப்பாற்றலை ஒப்பிட்டுப் பார்க்க நூற்றுக்கு எண்பத்து ஐந்துதான் வெள்ளியின் இழுப்பாற்றலாகும்.

சுக்ரன் சூர்யனைச் சுற்றி வரும் கதியில், சூர்யனுக்கும்-பூமிக்கும் இடையே-அதாவது சூர்யனுக்கு மேற்பால் அது வரும்பொழுது, அதற்கும்-பூமிக்கும் உள்ள தூரம் இருநூற்று அறுபது லட்சம் (26,000 000) மைல்களாகும். அந்தக் கதியில் அது எதிர்ப்பக்கம் போகும்பொழுது—அதாவது சூர்யனுக்கு அப்பால் கிழக்கில் வரும்போது அதற்கும்—பூமிக்கும் உள்ள தூரம் ஆயிரத்து அறுநூறு லட்சம் (16,00,00,000) மைல்களாகும்.

இதனால், இது வீசும் ஒளி, சூர்யனுக்கு மேற்பால்-பூமிக்கு அருகாக அதன் கதியில் வருகையில், மிகுதியாகவும்-சூர்யனுக்குக் கீழ்பால்-பூமிக்குத் தூரமாகச் செல்கையில் மிகவும் குறைவாகவும் இருப்பதாகத் தோன்றும். வெள்ளி சூர்யனைச்சுற்றி வருவது விநாடிக்கு இருபத்து இரண்டு மைல் வேகத்திலெனக் கணக்கிட்டிருக்கின்றனர். இவ்வழி அது சூர்யனை ஒரு தடவை சுற்றி வர இருநூற்று இருபத்து ஐந்து (225) நாட்கள் ஆகும். பூமி-சூரியன் இவற்றுடன் ஒரே கோட்டில் சுக்ரன் நேராக வருவதற்கு ஐந்நூற்று எண்பத்துநான்கு (584) தினங்கள் ஆகின்றன. ஜூன்-டிஸம்பர் மாதங்களில் சுக்ரன் சூரியனைக் கடந்து செல்வதாகத் தோற்றும்.

சுக்ரனில் காற்று மண்டலமிருத்தலின், அதைச் சுற்றிலுமுள்ள அழகான ஒளிவட்டம் காட்சிக்குரியதாகவிருக்கும். சூர்யனுக்கு மேற்பால் சுக்ரன் வருகையில், காலை நட்சத்திரமாகவும்-கீழ்பால் வருகையில், மாலை நட்சத்திரமாகவும் நிலவுலகினுக்குக் காட்சி தருகின்றது. இது இயல் ஒளி கொண்டதன்று. மற்று, புதன் முதலிய இதர கோட்களைப் போன்று

அதன் மீது பரவும் இயற்றழற் கோணமான சூர்யனது ஒளியினாலேயே அது தெரிதலின், சந்திரனைப்போல அதுவும் கலைகள் உடையதாகத் தோற்றுகின்றது. பூமிக்கு அருகாக-அதாவது சூர்யனுக்கு மேற்பால் அது காலை நட்சத்திரமாகக் காட்சி தருகையில் அதன் தோற்றம் மெல்லிய பிறை வடிவில் (Shape)-ஆனால், பெரிய உருவில் (Bigger in size) இருக்கும். பூமிக்குத் தூரத்தே-அதாவது சூர்யனுக்குக் கீழ்ப்பால் மாலை நட்சத்திரமாகக் காட்சிதரும் பொழுது அது மிகவும் வடிவிற் சிறிய முழுமதி யென்னத் தோற்றும். இதன் கலைகள் கண்ணாடிகளின் மூலமாகவே நன்றாய்த் தெரியக் கூடும். இதற்குக் கலைகள் தோற்றுவதைக்கொண்டு இது சூர்யனைச் சுற்றி வருகின்றதென்று நிச்சயிக்கின்றனர்.

வெள்ளிக்குத் தன்னைத்தான் சுற்றிவரும் ஒரு கதி உண்டா? உண்டென்றால், அவ்வாறு அது தன்னைத்தான் சுற்றிவரும் ஒரு சுற்றுக்குரிய பொழுது எவ்வளவு? என்பனபற்றிய விவரங்களைத் திட்டமாக இன்னும் கண்டுபிடிக்கவில்லை. இதன் குறுக்களவும்-நேரளவும் சமமாகக் காணப்பெறுதலின், இதன் வட-தென் (துருவ) முனைகள் தட்டையா யிருப்பனவென்று கூறுவதற்கில்லை. வெள்ளி உலகத்தைச் சுற்றுயிருக்கும் காற்று மண்டலத்தைத் தொலைத்து அதனைப் பார்ப்பதற்கு தொலை நோக்கியின் சக்தி காற்றுமண்டலத்தை ஊடறுத்துப் பார்ப்பதற்குரியதாக வில்லை.

பூமியைப் போன்று அது தன்னைச் சுற்றிவரும் ஒரு கதி கொண்டதென்பது தெரிய வருமாயின், அங்கே-வெள்ளி உலகிலும் மக்களைப் போன்ற உயிர் வருக்கங்கள் வாழக் கூடுமென்பதை நிச்சயிக்கலாம். புத உலகைப்போன்று வெள்ளி உலகின் ஒரு பக்கம் சூரியனை நோக்கி இருத்தல் கூடுமென்று வைத்துக் கொண்டாலும், அதில் ஒருவகையான உயிர் வருக்கங்கள் வாழுதல் கூடுமாம். அதற்குரிய காரணங்களைக் காணுகின்றனர் விஞ்ஞானிகள். அதன் ஒரு பக்கமிருந்து மற்றொருபக்கம் அதன் மேற்பரப்பு சூடு-உஷ்ணம் செல்லுதற்கும்—குளிர்ச்சி பரவுதற்கும் ஏற்றவிதம் சில அமைப்புகள் இருப்பதாகத் தெரிய வருகிறதாம். என்றாலும், அதன் துருவமுனைகள் தட்டையாய்—சாய்வுடையனவாய் இருப்பதைக் காணக் கூடாமையின், வெள்ளி உலகின் இதர நிலைகளை-அதாவது பகல்-இரவு அளவுகள்-பருவகால வேறுபாடுகள் ஆகிய விவரங்களை இதுவரையுமுள்ள அவதானங்களிலிருந்து தரக் கூடவில்லை. எனினும், நிபுணர்கள் இதைப்பற்றிய உண்மைகளை அறிந்துவிடும் விஷயத்தில் பெரிதும் கவனஞ் செலுத்தி வருகின்றனர்.

சூர்யனுடைய உதயத்திற்கு முன்னர் கீழ்த்திசையில்-பின் இரவில் அதாவது உஷக்காலத்தில் கிழக்கு அடிவானிடத்து(Horizon East) உதித்து எழுந்த வண்ணம் உயர்ந்துகொண்டே தரும் காட்சி பிறையென்ன-ஆனால் பெரியதாகத் தோற்றும். சூர்யனுடைய அஸ்தமனத்திற்குப் பின்னர் மேற்றிசையில்-முன் இரவில் மேற்கு அடிவானிடத்து (Horizon West) அஸ்தகிரியை நோக்கி நெருங்கி வீழ்ந்தவண்ணம் தரும் காட்சி மிகவும் சின்னஞ்சிறிய முழுமதிபோல விருக்கும். இது வீசும் ஒளி வியாழன் தரும் ஒளியினும் பிரகாசத்தில் மிகுந்தது.

வெள்ளி உலகினைச் சுற்றிவரும் பால் மதிகள் எதுவும் கிடையா. சுற்றிவரும் பால்மதிகள் எதுவு மற்றது புத உலகம் என்று ஒன்று உண்டென இது முன் நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.

வியாழ அண்டத்தைச் சுற்றிய காற்று மண்டலம் எவ்விதம் அதைப் பற்றிய விவரங்களை அறியக் கூடாதவிதம் மறைந்திருக்கிறதோ அதைப் போலவே சுக்கிர அண்டத்தையும் பற்றிய ரகஸ்யங்களை அதைச் சுற்றிய காற்று மண்டலம் யாரும் கண்டறிந்து கொள்ளக்கூடாத விதம் வைத்திருக்கிறது. இதன் ஒளி வீச்சின் மூலம் இதன் வடிவு-இயல் முதலியன எதுவும் நிச்சயிக்கக் கூடாது போயினும், அது வீசும் ஒளிவீச்சு உலகியல் வெற்றிகளுக்குரிய பெரும் ஆதாரவாகக் கிழக்கிலும்-மேற்கிலும் மதிக்கின்றனர். சந்திரனைப்போல கலைகளுடையதாய உதய திக்கில் பிறையாய்—அஸ்தமன திக்கிலிருந்து முழுமதியாய்க் காட்சி தருதலின், இதுவும் வளர்ச்சிக்குரிய நிலைகொண்ட கன்னி (Virginity) யாகக் கொள்கின்றனர். மேலை நாட்டினர் இதை வீனஸ் (Venus எம்பர். மத்ய ஐரோப்பாவிலும்—மத்யதரைக் கடலோரமுள்ள பிரதேசங்களிலும் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னம் வாழ்ந்து வந்த மக்கள் இந்த வெள்ளியை பாக்கியம்-செல்வம் தரும் கடவுளாக (God of Riches)க் கருதி வழிபட்டு வந்தனர். இதிற் தோற்றும் கலைகளைக்கொண்டு அக்காலத்து மக்கள் இதற்குக் கடவுள் தன்மையைக் கற்பிக்கையில், பெண்மைக் கடவுளாகவே கொண்டு கன்னித் தெய்வம் (Goddess of Virginity) என்றனர். இதற்குரிய வழிபாட்டு முறைகள் கி. மு. நான்காம் ஐந்தாம் நூற்றாண்டின் கிரீஸ் தேசத்துச் சரித்தாசிரியர்களின் குறிப்புகளினின்றும் தெரியத்தக்கதாக விருக்கிறது. உலகியல் பொருள்களில் சித்திதரும் வெற்றிக் கடவுள் (Power of Success) என்று அவர்கள் பெரிய நம்பிக்கை கொண்டிருந்தார்களாம். இன்பக் கடவுள் (God of Happiness) என்று போற்றி வந்தனராம். இந்தக் கோளை நோக்கிய வழிபாட்டில் மணம் மிக்க மலர்கள்-அத்தர்கள்-மது-பால்-இவற்றை அர்ப்பணஞ் செய்வார்களாம். இதன் பிறை தரிசனம் அதிருஷ்ட இனங்களின் சித்திகளைக் குறிக்குமென்றும், முழுமதி தரிசனம் இன்ப நிகழ்ச்சிகளைக் காட்டுகிறதென்றும் அவர்கள் கருதினார்களாம்.

---

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

சாதி புராணம் பாடுகிறார். இவரைப் போன்றவர்கள் இந்தியாவிலிருக்கும் வரையும் நம் நாட்டுக்கும் நமக்கும் விமோசன மேது? நம் மிடையே நிலவும் வகுப்பு வேற்றுமையையும், மாற்சரியத்தையும் பெரிது படுத்தி வெளி நாட்டார் இழித்துக் கூறி ஏளனஞ் செய்வதில் ஆச்சரிய மென்ன இருக்கிறது? அந்நியர்கள் நம் நாட்டையும், கலை நாகரிகங்களையும் கேவலப் படுத்திப் பேசி வருவதை உணர்ந்தேனும், நாம் ஒற்றுமை யுணர்ச்சியைக் கொள்ள வேண்டாமா! ஆகவே, நம்மிடையேயுள்ள சிறு பூசல்களையும் வகுப்புவேற்றுமைகளையும் அபிப்பிராய பேதங்களையும் விட்டொழித்து, நமது தேசத்தின் உயர்வுக்காகவும், சமூக முன்னேற்றத்துக்காகவும் நாம் பாடு படுவோமாக!

# வில்லியம் தாம்ஸன்

T. P. நவநீதகிருஷ்ணன், M.A., அண்ணாமலை சர்வகலாசாலை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், உயர்ந்தோரென மக்களேத்தும் பலர் தோன்றினர். அவ்வான்றோர்களில் வில்லியம் தாம்ஸன் எனும் விஞ்ஞானியும் ஒருவராவர் என்பதில் சற்றேனும் ஐயமில்லை. ஆயினும், எவ்வரும் பணியை யாற்றி இவர் மேன்மைக்குகந்தவரானார் என எடுத்துக் கூறுதல் இயலாது தோன்றும். விஞ்ஞானத் துறையில் இவரடைந்த வெற்றிகள் பலவாகும். எனினும், இவரெய்திய புகழுக் கேற்றதான பணிகளை இவர் அத் துறையில் ஆற்றினாரல்லர் என இற்றை ஞான்றினர் கருதுகின்றனர். ஏனெனின், அத் துறையில் இவராற்றிய பணிகள் பலவாயினும், அவற்றில் ஒன்றேனுமாவது, ஒரு புதிய விஞ்ஞானக் கொள்கையை நிலை நாட்டினதாகவோ, அல்லது விதியியல் விஞ்ஞானத்தை முன்னேற்றியதாகவோ காணப்படவில்லை. தாம்ஸன் அறிவாற்றல் படைத்தவரெனினும், அமைதியுடன் சிந்திக்கும் பெற்றியையும் விடா முயற்சியுடன் உழைக்கும் உரத்தையும் பெற்றவரன்று. இன்னும், இவர், தன்னலப்பற்றும் தற்பெருமையும் வாய்த்தவராவார். பிறர் கருத்துக்களில் உள்ள ஊன்றிக் கருதும் பழக்கம் இவரிடமில்லை. பெரும் விஞ்ஞானிகளின் இயல்பான கற்பனையின் ஆற்றலை இவரிடம் காண முடியாது. கருத்துக்களின் விளைவியலையே இவர் பெரிதெனப் போற்றினரே யன்றி, அவற்றினால் விஞ்ஞானத்தைப் பெருக்க இவர் எண்ணியவரன்று. விஞ்ஞான நூலை யோங்கச் செய்யும் ஆராய்ச்சிகள், விஞ்ஞான விளைவியற் றொழில்களை வளர்க்கும் ஆராய்ச்சிகள் எனும் இவ் விரு வகையான பணிகளிலும் ஒருங்கே ஈடுபட இயலாத காலத்து, பாரடே (Faraday) யென்ற விஞ்ஞானப் பேரறிஞர் பொருள் தரும் விளைவியலைத் தள்ளிவிட்டு, பொருள் காணும் நூல் வளர்ச்சியிலேயே ஈடுபட்டனர். இதே தருவாயில், தாம்ஸனோ அழியாச் செல்வம் ஈதலைப் புறக்கணித்து, அழியும் செல்வம் பெறலை நாடினார். எனவே, தாம்ஸன் அறிவு விலை வணிகம் செய்து, பல்லாயிரம் பொன் சேமித்துப் பதவியும் பெற்று, உயர்மகனார் எனப் பலராலும் போற்றப்பட்டு வாழ்ந்தனர்.

வில்லியம் தாம்ஸன் பெல்பாஸ்ட் (Belfast) நகரில், 1820-ம் ஆண்டில் பிறந்தனர். இவர் தந்தையார் அந் நகரின் கண்ணே யிருந்த அரசக் கல்வி நிலையத்தில் (Royal Academical Institution) எண்ணியல் நூல் பேராசிரியராய் (Professor of Mathematics) இருந்தனர். தம் ஆறாவது ஆண்டில் வில்லியம் தம் தாயை இழந்தனர். எனினும், இவர் தந்தையே அன்னையின் அன்புடன் தன்னிள மகவைப் பாராட்டிச் சீராட்டி வளர்த்தனர். இவர் உடன் தோன்றல்களானவர் பலரிருந்தும் இவர் தந்தையார் வில்லியத்தையே மிக்க மாண்புடன் பேணி வந்தார். இவரது மதிமுகமும் பண்டேய்த்த மொழிகளும் உள்ளங்கவர் புன் முறுவலும் தந்தையாரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. ஆண்டுகள் பல கழிந்து, இவர் செவ்வனே பேசத் தெரிந்த பின்னரும், தந்தையின் அன்பைக் கொள்ளை

கொள்ள மழலை மொழிகளையே அறிந்து பயின்று வந்தார். இவர் உடன் பிறந்தோர் இக் கள்ள நடிப்பைக் கண்டு நகைத் தெள்ளினர்.

இவர் தந்தையார் தம் பிள்ளைகளுக்குத் தாமே நன் முறையில் கல்வி பயிற்றுவித்தார். ஆதலின், தாம்ஸன் பல்கலைக் கழகத்தைச் சேர்வதன் முன் எவ் வகையான பள்ளிப் படிப்பும் பெறவில்லை. 1832-ம் ஆண்டில் தந்தை தாம்ஸன் க்ளாஸ்கோ (G!asgow) பல்கலைக் கழகத்தில் எண்ணியல் நூல் போராசிரியராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப் பணியை அவர் ஏற்று, தம் மக்களுடன் க்ளாஸ்கோவிற்குச் சென்றார். அங்கும், அவர் தம் பிள்ளைகளுக்குத் தாமே கல்வி புகட்டி வந்தார். 1834-ம ஆண்டில் வில்லியம் தம—பத்தாவது ஆண்டில் தொடக்கத் தேர்ச்சியில் (Matriculation) வெற்றி பெற்றார். தேறியபின், அப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தார். சேர்ந்த முதலாண்டிலேயே, லத்தீன் (Latin) மொழியினின்று 'விண்ணவரின் சொல்லாடல்' (Dialogues of the Gods) என்ற நூலைத் தம் தாய் மொழியில் சிறந்த முறையில் ஆக்கியவ ரெனப் பரிசு பெற்றார். தம பதினைந்தாவது ஆண்டில் விஞ்ஞானப் பரிசையும், பதினாறாவது ஆண்டில் வான நூற் பரிசையம் இவர் பெற்றார். இவ் வாண்டிலேயே 'இவ் வுலகின் வடிவம் (On the figure of the earth) என்ற பொருள் பற்றி எண்பத்தைந்து பக்கங்கள் கொண்ட கட்டுரை யொன்றை எழுதி, பல்கலைக் கழக பதக்கத்தையும் இவர் தமதாக்கினர்.

1840-ம் ஆண்டில் இவர் தந்தையார் தம் மக்களுடன் ஐரோப்பாவிலுள்ள பல நாடுகளையும் சுற்றிக் காணச் சென்றார். சுற்றி மீண்டபின், தாம்ஸன், கேம்ப்ரிட்ஜ (Cambridge) பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பீடர் அவுஸ் (Peterhouse) கல்லூரியில் சேர்ந்தார். இவர், அங்கிருந்த காலத்து ஆராய்ச்சிகளில் மிகவும் ஈடுபட்டு, அதன் விளைவாய் பன்னிரு கட்டுரைகளை வெளியிட்டனர். தம் தேர்ச்சிச் சோதனைக்கான பாடங்களைக் கற்பதில் சிறிது பொழுதையே செலவழித்தா ரெனினும், 1845-ம் ஆண்டில் நடைபெற்ற பல்கலைக் கழக இறுதிச் சோதனையில் தேர்ச்சி யடைந்ததுமன்றி இரண்டாவது இடமும் பெற்றார். எனினும் இவர் தந்தையார் இவர் முதலிடம் பெறவில்லை யென்று வருந்தினர்.

பல்கலைக் கழகப் பட்டம் பெற்ற தாம்ஸன், பாரிஸ் (Paris) நகர் சென்று, ரேனோ (Regnault) எனும் விஞ்ஞானப் பேரறிஞ ராற்றிய விரிவுரைகளைக் கேட்கலாயினர். அவருடைய சோதனை மன்றத்தில் அவர் கீழ் இவர் பணியாற்றி வந்தனர். அம்மாநகரில் இவர் ஐந்து திங்கட்களே யிருந்தனர். அதன் பின், கேம்ப்ரிட்ஜுக்கு மீண்டு மேகி, பல்கலைக் கழகத்தாரிடமிருந்து பொருளுதவி பெற்று, தம் மாராய்ச்சிகளி லீடுபடலாயினர். அவ் வாண்டிலே அங்கு நடைபெற்ற பிரிட்டிஷ் விஞ்ஞான முன்னேற்றச் சங்கத்தின் (British Association for the Advancement of Science) ஆண்டு விழாக் கூட்டத்தில், நிலை மின்சாரத்தை (Static Electricity)ப் பற்றிப் பேசினார். அஞ்ஞான்றே, பாரடே (Faraday) யென்ற விஞ்ஞானப் பேரறிஞரின் நட்பைப் பெற்றார்.

1846-ம் ஆண்டு, மே மாதத்தில், க்ளாஸ்கோ பல்கலைக் கழக விஞ்ஞானப் பேராசிரியராய் ஒருவர் வேண்டியதாயிற்று. அவ் வேலையைப் பெற

தாம்ஸன் விண்ணப்பித்தார். இவர் தந்தையார், பெயர் பெற்ற விஞ்ஞானிகளான முப்பதின்மர் தம் மகனைப் பாராட்டி எழுதிய நற்சான்றுக் கடிதங்களுடன் பல்கலைக் கழக ஆட்சியாளரைப் பலகால் கண்டனர். இதன் விளைவாய், அவ்வாண்டில் செப்டம்பர் 11-ம் நாள், இளைய தாம்ஸன் அவ் வணைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சிறப்புடன் விளங்கியப் பல்கலைக் கழகமொன்றினில், பேராசிரியராய்த் தம் இருபத்தீராம் ஆண்டிலேயே தேர்ந்தெடுக்கப்படும் பெரும் பேற்றை வில்லியம் தாம்ஸன் பெற்றார். தந்தையாரும் தம்போன்று தன் மகனும் பேராசிரியரானமை கண்டு, மட்டிலா மகிழ்ச்சியடைந்தார். பேராசிரியர் அணையில் அமர, தாம்ஸனார் காட்டிய வன்மையை, நூல்களைக் கற்றறிவதில் காட்டவில்லை. இவர் விஞ்ஞான நூல்களைச் செவ்வனே கற்றிலர். தான் புதியவையெனக் கண்டுபிடிக்கும் பொருள்கள் முன்னரே எவராலும் கண்டுபிடிக்கப்பட்டனவோவென அறியுமுன் தன் கருத்துக்களை வெளியிட்டு விடுவார். தாம் விழைவு கொண்டவற்றில் ஊக்கங் கொண்டனரேயன்றி, விஞ்ஞானப் பேராசிரியருக்குகந்த முறையில் அறிவு நூற் பயிற்சியில் இவர் ஈடுபடவில்லை. இவ்வாறு கல்விபாற்பட்டவற்றினில் கருத்தூன்றாதிருந்தாரெனினும், பிற்றைஞான்று அறிவு வணிகம் செய்தபோது தம் வன்மையை முற்றும் காட்டினார்.

ஆசிரியரின் அணையில் அமர்ந்த பின், தாய்ஸன் செயல் முறை விஞ்ஞானத்தை (Practical Science) மாணவர் பயிலுவதற்கேற்ற சோதனை மன்றமொன்றினை நிறுவினார். அதுவே, இவ்வுலகில், பல்கலைக் கழகமொன்றினில் முதன் முதலாய் நிறுவப்பட்ட சோதனை மன்றமாம்.

1846-ம் ஆண்டு நவம்பர் முதல் நாள் இவர் பேராசிரியர் என்ற முறையில் தம் முதல் விரிவுரையை நிகழ்த்தினார். அது மின்சார காந்தப் புலத்தை (Electro magnetic field)ப் பற்றியதாகும். மின்சாரம், காந்தம், இவற்றினிடையுள்ள இயக்கங்களைப் பற்றி பொதுப்படக் கூறிவிட்டு, தம் அடுத்த விரிவுரையில் விவரமான முறையில் இவற்றைப்பற்றி விளக்குவதாகக் கூறி, இவர் தம் விரிவுரையை முடித்தார். அந்த விரிவுரையாற்றும் நாள் வருமுன் இவர் அதை முற்றும் மறந்தனர். இவர் சுட்டிக் காட்டிய வழியை, மாக்ஸ்வெல் (Maxwell) என்ற விஞ்ஞானி பின் பற்றி, 'மின் காந்தப்புல இயக்கவியல் கொள்கை (Dynamic Theory of the Electro magnetic field)யை, 1860-ம் ஆண்டில், நிலை நாட்டி விஞ்ஞானத்தைச் சிறப்பித்தனர். 1847-ம் ஆண்டிலேயே ஜூன் 11-ம் நாள், தாம்ஸன் பாரடேயுக்கு எழுதிய கடிதத்தில் இப் பொருளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இருபத்து மூன்றாண்டுகளே நிரம்பிய இவ் விளம் பேராசிரியரின் கூர்த்த மதியை அக் கடிதம் நன்கு எடுத்துக் காட்டுகின்றது. ஆயினும், பாரடே அக் கடிதத்தில் கண்ட பொருளில் சிறிதேனும் தம் கருத்தைச் செலுத்தினவராகக் காணப்படவில்லை. பாரடே, விஞ்ஞானப் பேரறிஞரேயாயினும் பிறரை விஞ்ஞானப் பணியில் ஊக்குவிக்கும் திறமை வாய்ந்தவரன்று என இதனின்று நாம் உணர்கிறோம். அறிவின்பாற் பட்ட இளைஞரும் முதியோரும் ஒத்துழைத்துப் பணி செய்யும் உளப்பான்மையையும் பெற்றிருந்தாராயின், விஞ்ஞானத்தின் கருவூலம் எத்தனை அரும் பெரும் பொருள்கள் நிரம்பி விளங்கி யிருக்குமோ? இளம் விஞ்ஞானி

திரிதரு உளத்தினராய் பொருளையும் புகழையும் நாடி நின்றார். முதிய வரோ வெனின், செல்வாக்கால் பதவி பெற்ற இளைஞர், நன்மாண் நுழை புலனையும் பெற்றிருத்தல் இயலாத தன்றென எண்ணி, அன்னாரைப் பொருட்படுத்தாது விடுத்தனர். நன்னெறி யாதென அறிதற்கேற்ற அனுபவமின்றி ஊசலாடிக் கொண்டிருந்த இருபத்து மூன்றாண்டினர்க்கு வழி காட்டியாய் நின்று, விஞ்ஞானத்திற்கு உரைசால் சிறப்பு செய்யும் வாய்ப்பை முதியோர் இழந்தனர். இவ் விருவரில் பிழை யார் மாட்டுளது? இருவரும் பிழையற்றவ ரென்பதே எம் கருத்து. விஞ்ஞான வினைகள் ஒழுங்கின்றி ஆற்றப்பட்டு வந்த அக் காலத்தின் கொடுமையே, அறிவில் ஒன்று பட்டும் பெற்றியில் வேறுபட்டு மிருந்தவர் ஒத்துழைத்துப் பணியாற்றாததற்குக் காரணம் என நாம் துணிகிறோம்.

பேராசிரியர் தாம்ஸன் காந்தத்தைப் பற்றி விதி வியலான பல ஆராய்ச்சிகள் செய்து, அவற்றின் விளைவுகளைக் கட்டுரைகள் வாயிலாய் வெளியிட்டார். இவையே இவர் வெளியிட்ட மற்ற கட்டுரைகள் யாவற்றினையும் விட மிக்க ஒழுங்குடனும் தெளிவுடனும் தொகுக்கப் பட்டவையாம்.

காந்தத்தைப் பற்றிக் கருதுவதை அத்துடன் நிறுத்திவிட்டு, சூட்டைப் பற்றின ஆராய்ச்சிகளைத் தாம்ஸன் தொடங்கினார். சூடும் ஒரு வகையான ஆற்றலே (Energy) யென்று இதற்கு முன்னரே இதர விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருந்தனர். சூட்டை உட்கொண்டு நீராவிப் பொறி போன்றவை இயங்கும்போது, சூடானது இயக்க வியலான ஆற்றலாய் மாறுகின்றது என அவர் காட்டி யிருந்தனர். இம் மாறுதல்களைப் பற்றின அளவியலானதும் திட்டமானதுமான விதிகள் யாவை என்பதைத் தாம்ஸன் கண்டு பிடித்தார். இவ் விதிகளை 'சூட்டியக்க வியல் விதிகள்' (Laws of Thermodynamics) என விஞ்ஞானிகள் குறிப்பிடுகின்றனர்.

நம் பேராசிரியர், அடுத்ததாக காற்றைத் தம் ஆராய்ச்சிக்கேற்ற பொருளென எண்ணினார். இவ் வாராய்ச்சியில் தம்முடன் ஜூல் (Joule) என்ற விஞ்ஞானியையும் ஈடுபடச் செய்தார். ஓரிடத்தில அடைக்கப்பட்ட காற்றானது, வெற்றிடத்தில் (Vacuum) பெருக்க மடையும்போது, அதில் குளிர்ச்சி யேற்படுகின்றது என இவர் கண்டனர். அவ்வாறான வெப்ப நிலைக் குறைவுக்கு (Decrease of Temperature)க் காரணம் யாது என்பதைப் பற்றிக் கருதினர்; மாக்ஸ்வெல் (Maxwell) நிலை நாட்டிய நுண்டுகளியக்கக் கொள்கை (Kinetic Theory)யின் துணை கொண்டு, தாம் கண்ட தட்பவியல் தோற்றத்தின் காரணத்தை விதியியல் முறையில் விளக்கினர். இங்ஙனம் இவர் கண்ட இவ் வெப்பநிலைக் குறைவை ஜூல்-தாம்ஸன் விளைவு (Joule Thomson effect) என்னும் பெயரால் விஞ்ஞானிகள் இன்றும் குறிப்பிடுகின்றனர். இவ் விளைவியல் நியதிக் கொண்டே, நாம் இன்று எங்கும் காணும் குளிருண்டாக்கும் பொறிகள் (Refrigerators) அமைக்கப்படுகின்றன. இவ் வகையான ஆராய்ச்சிகளினின்று, இவர் தட்பத்தின் ஈறான நிலைமை யொன்றுண்டு என அறிந்தனர். அதாவது, ஒரு குறித்த நிலைமைக்குக் குறைவான குளிர்மையை நாம் பெற இயலாது. இந் நிலைமையில், ஒரு பொருளின் வெப்பம் முற்றும் அகற்றப் படுகின்றது. ஆதலின், இதுவே வெப்ப நிலையின் 'தனி இன்மை'

(Absolute zero)யாகும். இவ் வின்மை நிலைமையினின்று தொடங்கும் வெப்பநிலை அளவை முறையை, 'தனி வெப்பநிலை அளவியல்' (Absolute scale of Thermometry) என விஞ்ஞானிகள் அழைக்கின்றனர். இங்ஙனம் இவர் வெளியிட்ட கருத்து, பூத விஞ்ஞானத்து (Physical Science) அடிப்படையானவற்றின் பாற்படும்.

1849-ம் ஆண்டில் க்ளாஸ்கோ நகரில் எங்கும் வாந்திபேதி நோய் பரவிற்று. அந் நோய் வாய்ப்பட்டு தாம்ஸனின் தந்தையார் உயிர் துறந்தனர்.

1851-ம் ஆண்டில் தாம்ஸன் அரச விஞ்ஞானச் சங்கத்தின் உறுப்பினராக (Fellow of the Royal Society)த் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1852-ம் ஆண்டில் இவர் மார்கரட் க்ரம் (Margaret Crum) என்ற பெண்மணியை மணந்தனர். அவள் பல நலங்களும் பெற்றவளாயினும் உடல் நலம் மற்றும் பெற்றிலாதாயினள். தாம்ஸன் தன் மனைவியை அன்புடனும் பொறுமையுடனும் பேணி வந்தார்.

1853-ம் ஆண்டில், இவர் தோன்றி மறையும் மின்சார ஓட்டம் (Transient Electric Currents) என்ற பொருள் பற்றி நீண்டதோர் கட்டுரையை வெளியிட்டனர். அதில் மின்சார மூட்டப்பட்ட தொகுபி (Charged Condensers) களினின்று, மின்சாரம் வீட்டமாகும் (Discharged) போது, அது ஊசலாடும் இயல்பினையுடையது என இவர் விளக்கியுள்ளார். சில போழ்து நாம் காணும் மின்னல் அலைவடிவாய்த் தோன்றுதற்கு இதுவே காரணம் என இவர் கூறியுள்ளார். மின் தொகுதிகளினின்று விடுவிக்கப்படும் மின்சாரம் ஊசலாடும் இயல்பினையுடையது, எனும் விஞ்ஞானியக் கருத்தின் விளைவாகவே, இக் காலத்தில் வானொலி பரப்பும் முறைகளை நாம் பெற்றுள்ளோம். இம் முறைகளுக்கு அடிப்படையான மற்றொரு விஞ்ஞானியக் கருத்து, மாக்ஸ்வெல் தோற்றுவித்த மின்காந்தப்புல இயக்கவியல் கொள்கை (Dynamic Theory of the Electro magnetic field) என்பதாகும். இவ்வாறிருந்தும், தாம்ஸன், மாக்ஸ்வெலின் கொள்கை நன் முறையில் நிலை நாட்டப்பட்டதன்று எனக் கூறி அதை யேற்க மறுத்தார். தாம்ஸன் தம் கட்டுரையில் விரித்துக் கூறியவற்றின் துணை கொண்டாக்கிய கருவிகளைக் கொண்டு, ஹர்ட்ஸ் (Hertz) எனும் விஞ்ஞானி, 1887-ம் ஆண்டில், மாக்ஸ்வெலின் கொள்கையை சோதனை வாயிலாய் நிலை நாட்டினர் என்பது குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

1854-ம் ஆண்டிற்கு முன், அதாவது, தம் முப்பதாம் ஆண்டிற்கு முன், இவர் தொண்ணூற்றாறு விஞ்ஞானியக் கட்டுரைகளை வெளியிட்டனர்.

அடுத்த இதழில் முடிவு.



# பொறுமை வேண்டும்

க. சிதம்பரம் பிள்ளை.

"சும்மா இருக்கச் சுகம் பெறலாமே" என்றார் ஒரு பெரியார். அங்ஙனம் அவர் சொன்னது உலகப் பொருள்களின் மேல் சென்று கொண்டிருக்கும் ஐம்புலன்களையும் அவ்வாறு செல்லவொட்டாமல் ஒரு வழி நிறுத்துவதைப் பற்றியாகும். அவ்வாறு புலன்களை ஒருவழிப்படுத்தும்போது ஏற்படும் இன்பத்துக்கும், இறைவனுடன் இரண்டறக் கலந்து திளைப்பதாகிய பேரின்பத்துக்கும் நெருங்கிய உறவு உண்டென்பது அப் பெரியார் கருத்து.

உலகப் பொருள்களின் மேல் சென்று கொண்டிருக்கும் புலன்களை ஒரு வழி நிறுத்துவதென்பது, இவ்வுலக இன்பங்களை வெறுத்து நீக்கின துறவிகளுக்கு மட்டும் ஆகும் காரியமாம். உலக நிலையில் நிற்கும் இல்லறத்தானுக்கு அது எளிதல்ல. அவனுடைய கண்ணையும், காதையும், வாயையும், நாசியையும் உடலையும் வசீகரித்து இழுக்கக்கூடிய அனேக பொருள்கள் அவனைச் சூழ்ந்துகொண்டு நிற்கின்றன!

இந்த நிலையில் இல்வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் ஒருவன், அவ்வில்வாழ்க்கையை சீர்பெற நடத்தி வருவதென்பது சாமானியமல்ல; அதற்குரிய அனேக ஒழுக்க முறைகளைக் கடைப்பிடித்துவர அவன் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறான். அவற்றுள் தலைசிறந்தது பொறுமை.

ஏதேனும் காரணத்தை முன்னிட்டோ தெரியாத்தனமாகவோ பிறனொருவன் நமது மனம் வருந்தும்படியான குற்றத்தைச் செய்யுங்காலத்து, நாமும் அதற்குப் பதிலாக அவனிடத்து திருப்பிச் செய்யாமல், அதனைப் பொறுத்துக் கொள்வதே பொறுமையாம்.

மக்களுடைய குணங்களெல்லாம் ஒன்று போல் இல்லை. ஒருவன் அறிவாளி, இன்னொருவன் மூடன்; ஒருவன் சாத்வீகி, இன்னொருவன் பொறுமையற்றவன்; இப்படி பலதிறப்பட்ட மக்களைக் கொண்டதாகவே உலகம் இருக்கிறது.

மனிதர்களுக்கு இருக்க வேண்டிய அறிவு, சாந்தம் முதலிய நல்ல குணங்கள் பணக்காரர்களிடத்துத் தான் இருக்குமென்றும், அறிவின்மை, பொறுமை இழந்து பேசல் முதலிய தீக்குணங்கள் ஏழைகளிடத்துத்தான் காணப்படுமென்றும் சொல்லிவிடக் கூடாது. குணங்களுக்கும், செல்வீகம் ஏழ்மை இவற்றுக்கும் சம்பந்தமில்லை. நல்ல குணம் உள்ளவர்களும் தீய குணம் உள்ளவர்களும் பணக்காரர்களிலும் ஏழைகளிலும் உண்டு.

பணக்காரர்களாக இருந்தபோதிலும் ஏழையாக இருந்த போதிலும் அவர்கள் நல்ல குணமட்டும் இல்லாதவர்கள் என்பதை தெரிந்து கொண்டால், அவர்களிடத்து அறிவாளிகள் நடந்து கொள்ளும் விதம் எப்படி?

வேறொன்றுமில்லை; அவர்கள் சொல்லும் தீய வார்த்தைகளை யெல்லாம் பேசாமல் கேட்டுப் பொறுத்துக் கொண்டு சும்மா இருந்து விடுவது தான்!

அப்படியல்லாமல் ஒரு வேளை ஏதேனும் எதிர்த்துப் பேசி விட்டாலோ, 'உனக்கு அவ்வளவு கருவமா?' என்று வாயில் வந்தபடி யெல்லாம் பணக்காரன் அகங்கரித்துப் பேசுவதுந் தவிர, செய்கையிலும் எதையேனும் செய்து விடுவான்! பண சவுகரியமில்லாதவனாக இருந்தால், கண்டுங் காணாமலும் வரம்பு மீறிப் பேசுவான். ஆதலால் கூடின மட்டும் அத்தகையோர்களுடைய தொடர்பிலிருந்து நீங்கிக் கொள்வதே நலமாம்.

"கோதை அருவிக் குளிர்வரை நன்னாட!
பேதையோடு யாதும் உரையற்க—பேதை
உரைப்பிற் சிதைந் துரைக்கும், ஒல்லும் வகையான்
வழுக்கிக் கழிதலே நன்று"

['கோதை அருவிக் குளிர்வரை நன்னாட' என்பது ஆடூமுன்னிலை. அதாவது ஆணை முன்னிலைப்படுத்திக் கூறுவது; இங்கு பாண்டி மன்னனை முன்னிலைப்படுத்தி யிருக்கிறார் கவி. 'மாலை போல் விழுகின்ற நீர் அருவிகளை யுடைய குளிர்ந்த மலைகளை யுடைய சிறந்த நாட்டைக் கொண்ட அரசனே' என்பது பொருள். பேதையோடு—அறிவில்லாதவனுடன். சிதைந்துரைக்கும்—வரம்பு மீறிப் பேசுவான். ஒல்லும் வகையால் வழுக்கி—கூடின மட்டும் தப்பித்து.]

அப்படி யென்றால் பொறுமை வேண்டுவது தான். ஆனால், அது நமக்கு சரிசமானமானவர்களாவது, உயர்ந்தவர்களாவது அப்படி ஏதேனும் சொல்லி விட்டால் வேண்டுமானால் பொறுத்துக் கொள்ளலாம்; நம்மைவிட பணத்திலும் பதவியிலும் தாழ்ந்தவர்கள் சொல்லுந் தகாத வார்த்தைகளையும் எப்படிப் பொறுத்துக் கொண்டிருப்பது? என்கலாம்.

அது சரியன்று. 'மேன்மக்கள்' என்ற நற்பெயர் வாங்க வேண்டும் என்ற எண்ணமிருந்தால், நல்லொழுக்க மில்லாதவர் சொல்லும் எந்த வார்த்தைகளையும் பொறுத்துக்கொண்டு பேசாமல் இருந்து விட வேண்டியதுதான்.

அப்படிப் பொறுத்துக் கொள்ளுங் குணம் வாய்ந்த ஒருவனை, கடல் புடை சூழ்ந்த விவ்வுலகத்திலுள்ள அறிவாளிகள் யாவரும் புகழ்ந்து கொண்டாடுவர்.

"நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால், மற்றது
தாரித்திருத்தல் தகுதி, மற்—றோரும்
புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலம்
சமழ்மையாக் கொண்டு விடும்"

[நேர் அல்லார்—நமக்கு சமமல்லாதவர்—அதாவது கீழோர். நீரல்ல—தகுதியல்லாத சொற்களை. தாரித்திருத்தல்—பொறுத்துக் கொள்ளுதல்—சமழ்மை—பழிப்பு. மற்றோரும் என்பதில் 'ஓரும்' அசைச் சொல்.]

"மனிதன் இந்த உலகத்தில் உயிருடன் இருக்கும் வரையும் இன்பத்துடனேயே இருக்கலாமா?"

"ஓ, இருக்கலாம்."

"ஆமாம்; அவரவர் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு மனிதப் பிறவி வாய்க்கிறபடியால் இன்பமும் துன்பமும் கலந்தேயல்லவா வரும்? அப்படியிருக்க, ஒருவன் வாழ்நாள் முழுதும் இன்பமாகவே இருந்து வருவதென்பது எப்படி?"

"அது மெய்யே; துன்பம் என்பது மனிதனுக்கு வேதனையைச் செய்யக் கூடிய ஒன்று தான்; ஆனால், அவன் துன்பத்தை துன்பமாகப் பாவியாமல் இன்பமாகக் கொண்டு விடுவானேயானால், அப்பொழுது அத் துன்பம் அவனை அவ்வளவாகத் துயர் செய்யாது"–"இடுக்கண் வருங்கால் நகுக" என்பது நாயனார் பொன்மொழி.

முதலில், துன்பத்தை இன்பமாகப் பாவிப்பது எப்படி? என்பது போன்ற அனேக செய்திகளை மனிதன் அறியவேண்டும்; மனதை பொறுமைக் குணத்தில் நிறுத்த வேண்டும்; பழி பாவம் முதலியன அஞ்சத்தகுங் காரியங்களுக்கு அஞ்சவேண்டும்; தாம் செய்யும் எந்தச் செயல்களும் உலகத்தார் மகிழும்படியாக இருத்தல் வேண்டும். இப்படியெல்லாம் ஒருவன் செய்து வருவானேயானால் அவற்றிலிருந்து அவனுக்குக் கிடைப்பன இன்பத்தைத் தரும் பயன்களாகவே இருக்கும். அத்தகைய ஒருவனை துன்பம் ஏதும் செய்யாதென்றே சொல்லலாம். *

"அறிவ தறிந்தடங்கி, அஞ்சுவ தஞ்சி,
உறுவது உலகுவப்பச் செய்து,–பெறுவதனால்
இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது."

[உறுவது–தாம் செய்யுங் காரியங்கள்.]

பொறுமை வேண்டுமென்று இதுவரையும் சொல்லி வந்த தெல்லாம் பொதுவாகத் தானே! நம்மோடு நெருங்கிப் பழகிய நண்பனொருவன் நமக்குத் துன்பந்தரும் செயல்களைச் செய்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்போது நாம் செய்ய வேண்டியதென்ன?

நாம் ஒருவனை சினேகம் செய்து கொள்வதென்றால், அப்படி செய்து கொள்ளும் அப்பொழுதே அவனுடைய குணம் செயல் முதலியவற்றை நன்றாய்த் தெரிந்து தான் செய்துகொள்ள வேண்டும்.

---

* மனிதன் தன் ஆயுள் உள்ளவரையும் இன்பத்துடனேயே இருந்துவர வேண்டுமென்றால் அதற்கு அவன் என்னென்ன முறைகளை அறிய வேண்டும், ஏதேத செயல்களைச் செய்ய வேண்டும்? என்பனவற்றை விரிவாக 'மனிதனும் கடமைகளும்' என்னும் நூலில் காணலாம்.

கிடைக்குமிடம்:— "ஆனந்த போதினி ஆபீஸ்," சென்னை.

அதையெல்லாம் கவனியாமல் ஒருவனை முதலில் சிநேகம் செய்து கொள்கிறது. பின் அவன் ஏதேனும் அறிவீனமான ஒன்றைச் செய்யும் போது மனம் அழன்று அவன் நட்பை கை விட்டு விடுவது! இச் செய்கை அறிவுடைமைக்கு அழகன்றாம். 'அந்தரங்க நண்பனாக இருந்தஇவனே நமக்கு தகாததை செய்யும்படி ஆய் விட்டதே! இதுவும் [illegible]க்கேடு தான்' என்று நம்மையே நொந்துகொண்டு, அவன் செய்த துன்பச் செயல்களும் இன்பமாகவே வரக் கடவ என்று மன அமைதி கொள்வதே அறிவுடைமைக்கு அழகாம்.

அப்படியல்லாமல் அவனுடைய நட்பை அறவே ஒழித்துக் கொள்ளுதல் சிறப்புடையதன்று. ஏன? சிநேகம் செய்து கொண்ட பின் பிரிவதென்பது பகுத்தறிவில்லாத மிருகங்களுக்குக் கூட அருமை. அதனால்,

"இன்னா செயினும் இனிய ஒழிகஎன்று
தன்னையே தான்நோவின் அல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல், கானக நாட!
விலங்கிற்கும் விள்ளல் அரிது"

[இன்னா—இனிமையல்லாதது. விலங்கு-மிருகம். விள்ளல்—பிரிதல்.]

இந்தப் பொறுமை பிறன் விஷயத்தில் மட்டுமல்ல; நம் விஷயத்திலும் உபயோகப்படுத்த வேண்டிய சந்தர்ப்பங்கள் உண்டு.

நமக்கு ஏதேனும் ஆபத்து நேரிடுங் காலத்து, அதை விலக்கிக் கொள்வதற்காக இன்னொருவனை ஆபத்தில் அகப்படுத்தக் கூடாது. அதை நாமே பொறுத்துக் கொள்ளுதல் நல்லது.

வறுமை வாட்டுகிறது, பசியால் உடல் மெலிகிறது! என்றாலும் அவனவன் நிலைமை கெட்டு வயிறு வளர்க்க வேண்டுமென்பதில்லை. அதை விட அவ் வறுமையையும் பசிப்பிணியையும் பொறுமையுடன் பொறுத்து, அவற்றிற்கு இலக்காகிக் கொள்வதே சிறந்ததாம.

"இக் காரியத்தில் மட்டும் நீ ஒரு பொய்ச் சாட்சி சொல்; உடன் வறுமை நீங்கும்படியான அவ்வளவு திரவியம் தருகிறேன்" என்கிறான் ஒரு தனவந்தன். அதைக் கேட்ட நல்லொழுக்கமுள்ள ஒருவன் அத்தனவந்தனுக்குச சொல்ல வேண்டியதென்ன?

"என்ன தான் தரித்திரம் இருந்த போதிலும் அதை நான் பொறுத்துக் கொள்வேன்; ஆனால், ஆகாயத்தால் கவியப்பட்ட இந்த பூமி முழுதையும் எனக்கு தானமாக கொடுத்த போதிலும், பொய் மட்டும் சொல்ல மாட்டேன்" என்ற சொல்லிவிட வேண்டியது தான்!

"தான்கெடினும் தக்கார்கேடு எண்ணற்க; தன்உடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத்து உண்ணற்க-வான்கவித்த
வையக மெல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோடு இடைமிடைந்த சொல்."

---

# மனக்கோட்டையும் ஏமாற்றமும்

(ஜி. அழகிரிசாமி)

## 1

காலை எட்டு மணி. வேணு ஸ்நானத்தை முடித்துவிட்டு ஆங்கில முறையில் உடை தரித்துக் கொண்டான். ஆனாலும் நெற்றியில் திருமண் சாத்திக் கொண்டான். இதுவரைக்கும், எல்லோருக்கும் செல்வக் குழந்தையாக, சிறு பையனாக, பெரியவர்கள் மனப் போக்கில் தன் நடத்தையைக் கொண்டிருந்தான் வேணு. அன்று, பையனுக்கும், பெரிய மனிதனுக்கும் நடுவில் உள்ள பருவத்தின் வாழ்க்கை யரங்கில் புகும் முதல் நாள், கல்லூரிப் படிப்புக்காக சென்னைக்குப் புறப்பட்டான். ஊரோடு அவனுக்கு, அந்த செல்வப் பையனுக்கு ஆசீர்வாதங்கள்! பெரிய குடும்பத்துப் பையன், நல்ல பிள்ளை யென்றால் எல்லோருடைய அன்புக்கும் பாத்திரமாவது சகஜந்தானே?

அந்த ஊரில் கொஞ்சம் பரபரப்பாகத் தான் நடந்து கொண்டார்கள். கூண்டு வண்டியில் மெத்தையையும் தலையணைகளையும் எடுத்துப் போட்டான் வேலைக்காரன். சதங்கை கட்டிய சரியான மாடுகள். வேணுவை முதலில் வண்டியில் ஏறிக்கொள்ளச் சொன்னார் அவன் தகப்பனார் கோபால் ஐயங்கார். பின்னால் அவரும், அவர் 'நண்பர்' சடகோப ஐயங்காரும் வண்டி யேறினார்கள். தன் தாயாருக்கு நமஸ்காரம் செய்துவிட்டு எல்லோரிடமும் விடை பெற்றுக்கொண்டான் வேணு. அவளுடைய கண்கள் துளிர்த்த பாசத் துளிகள் வேணுவின் உள்ளத்தில் படிந்து விட்டன. எல்லோரும் ஒரு பெரும் மௌனத்தில் ஆழ்ந்தனர்.

வண்டி ஊருக்கு வடக்கே திரும்பியதும், வண்டியை நிறுத்தி மூவரும் கிருஷ்ணன் கோவிலில் ஸ்வாமி தரிசனம் செய்ய இறங்கினார்கள். வண்டியோடு நடந்து வந்த ஒரு ஐயங்கார் பையனைக் கூப்பிட்டு தம் வீட்டுக்கு ஒடி "திருப்பாவை" புஸ்தகத்தை எடுத்துவரச் சொல்லிவிட்டு கோவிலுக்குள் நுழைந்தார் கோபால் ஐயங்கார். துளசி தீர்த்தம் பெற்றுக் கொண்டு வண்டி யேறியதும் பையன் "திருப்பாவை'யைக் கொண்டு வந்து கொடுத்தான். அதை வாங்கித் தம் மகன் கையில் கொடுத்து அதைத் தினந்தோறும் படிக்கத் தவறக் கூடாதென உபதேசித்தார்.

குளத்தில் தாமரை மலர்கள் மலர்ந்திருந்தன. சூரியன் அதிகப் பிரகாசத்தை அடைய வான்வழிக் கிளம்பிக்கொண்டிருந்தான். வேணுவும், ஓர் உயர்ந்த பதவியை யடைய சென்னைக்குப் படிக்கப் புறப்பட்டான். அவனுடைய தகப்பனார் உள்ளத்தில் 'எதிர் பார்த்தல்' முளைவிட்டது. ஏக காலத்தில் சடகோப ஐயங்காரின் ஆசையில் ஒரு விஷ மலர் பூத்தது. அது வேணுவின் கல்லூரிப் படிப்பில் பழமாகப் பழுக்க வேண்டும் என்று எண்ணினார்.

ஸ்டேஷனை அடைந்தார்கள். புகை வண்டி வந்தது. வேணுவும் வண்டியில் ஏறிக்கொண்டபின் ஒருவருக்கொருவர் விடை பெற்றுக் கொண்டனர்.

“வேணு, எல்லாம் உன் சமர்த்திலேதான் உன் தகப்பனார் சந்தோஷமடைய வேண்டும். ஏதோ தெய்வத்தின் துணையோடு கஷ்டப்பட்டு படித்து உன் வீட்டில் விளக்கேற்ற வேண்டும்; போய்விட்டு வா” என்று சடகோப ஐயங்கார் சொன்ன விஷயம் கோபால் ஐயங்கார் உள்ளத்தில் ஒரு ஆழ்ந்த எண்ணத்தை சிருஷ்டித்ததுபோல் இருந்தது, அவர் மூச்சுவிட்டது. வேணுவை வழி யனுப்பிவிட்டார்கள்.

திரும்பவும் ‘நண்பர்கள்’ இருவரும் அதே மாட்டு வண்டியில் ஏறிக்கொண்டு ஊருக்குத் திரும்பினார்கள். கோபால் ஐயஙகார் மனது என்ன காரணத்திற்காகவோ ‘கம்’ என்றிருந்தது. பல பல விஷயங்களைப் பேசிக் கொண்டே சென்றார்கள். பையனுடைய படிப்பின் முடிவு. அவன் அடையவேண்டிய உத்தியோகம், அதன் களிப்பில் தாம் வாழப்போகும் சந்தோஷம், இவைகள் தான் கோபால் ஐயங்கார் மனத்தில் உலாவும் எண்ணங்கள். ஊர்வந்து சேர்ந்தார்கள்.

சடகோப ஐயங்கார் வீட்டுக்குப் போய்க் கட்டிலில் சாய்ந்தவர், அதிலிருந்து எழுந்திருக்க அதிகநேரம் பிடித்தது. பின்னால், நாலைந்து வருஷங்கள் கழித்து நடத்தவேண்டிய ஆட்டத்திற்கு, அவர் அன்றே திட்டங்கள் தயாரிக்க ஆரம்பித்தார். என்னவெல்லாமோ எண்ணினார். கடைசியில் ஒரு பெருமூச் செறிந்து “எல்லாம் அவன் செயலில் நடக்கும்” என்று முணு முணுத்தார்.

2

அந்த ஊரின் பெயர் ராமானுஜபுரம். பெயருக்கு ஏற்றபடி அந்த ஊரில் எவ்விடத்திலும் வைஷ்ணவர்களே நிரம்பியிருந்தது. ஊரின் வடபுறம் ஒரு கிருஷ்ணன் கோவில். அதன் பக்கம் ஒரு சிறு அக்ரஹாரம். ஏழெட்டு தென்கலை வைஷ்ணவ ஐயங்கார்கள் நல்ல ஸ்திதியில் வசிக்கிறார்கள். அவர்களுடைய நன்செய் நிலங்களை அண்டிப் பிழைக்கும் வேலைக்காரர்களின் குடும்பங்கள், அவர்களுடைய சொத்துக்களின் வரவு, செலவு, கோர்ட்டு நடவடிக்கைகள் முதலியவற்றின் போஷணையில் வாழ்ந்துவரும் இரண்டொரு சைவப்பிள்ளைமாரின் வீடுகள், இன்னும் ஒன்றிரண்டு குடும்பங்கள் சேர்ந்த சிறு கிராமம் அது.

சடகோப ஐயங்காரும் கோபால் ஐயங்காரும் பால்யமுதல் சிநேகிதர்கள். ஏறக்குறைய மூன்று மாதங்கள் முன் பின்னாக இருவர்களுக்கும் கல்யாணங்கள் நடந்தன. இருவரும் சொத்து சுகங்களில் அநேகமாய் சமமாகத் தான் இருந்தனர். இரண்டுபேர்களும் தெய்வபக்தியிலும், வைஷ்ணவ ஆசார அனுஷ்டானங்களைக் கையாண்டதிலும் ஒருவருக்கு ஒருவர் குறைந்துவிடவில்லை. அவர்கள் நட்பினிடையில் ஒரு சிறு ஊடல் வளர்ந்தது. அது கோபால் ஐயங்காருக்குக் கடைசிவரையில ஊடலாகத் தான் இருந்தது. ஆனால், வேணு கல்லூரிப் படிப்புக்குக் கிளம்பிய நாள்

முதல் சடகோப ஐயங்கார் உள்ளத்தில் அது பகைமையாக மாறியது. அது, மறுபடியும் ஊடலாக மாறி, பின்னால் அதுவும் இல்லாமல் போக வேண்டுமானால் தமக்குள்ளேயே ஒரு நிபந்தனையையும் தயார் செய்து கொண்டார்.

சடகோப ஐயங்காருக்கு ஒரே மகள். வேணுவும் தன் தகப்பனாருக்கு ஏகபுத்திரன். இந்த விஷயந்தான் பிற்கால நிகழ்ச்சிகள் உருவடையும் கருவாக இருந்தது, சடகோப ஐயங்கார் மகளுக்குத் தன் தாய் வழியில், அவர் நினைத்த மாதிரி ஊழ்வினைப் பயனால் க்ஷயரோகம் பீடித்திருந்தது.

இரண்டு ஐயங்கார்களும் தங்கள் சம்சாரங்களைத் தொடங்கிய ஆரம்பத்தில் ஒருவர்க்கொருவர் விவாக சம்பந்தங்களைச் செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தை, வெளிப்படுத்தாமலே அவரவர்கள் இருதயத்தில் வளர்த்து வந்தார்கள். பின்னால் தான் என்ன, சடகோப ஐயங்காருக்கு ஆண்டாள் பிறந்த பின் அவளுக்கு க்ஷயரோகம் பற்றியிருந்ததை பிரத்தியக்ஷமாகப் பார்த்துங்கூட, கோபால் ஐயங்கார் அவளைத் தன் மகனுக்கு மணம் செய்விக்க வேண்டுமென்ற எண்ணத்தைக் கைவிடாமல் தான் இருந்தார். ஊழ்வினைப் பயனில், தெய்வம் விட்ட வழியில் தம் சித்தங்களையெல்லாம் அர்ப்பணம் செய்த அவருக்கு க்ஷயரோகம் பயங்கரமாகத் தோற்றுமா?

வேணு பக்கத்துப் பட்டணம் ஒன்றில் எஸ். எஸ். எல். ஸி. படித்துக் கொண்டிருக்கும் போது, ஒரு நாள். அன்று மாலை இரண்டு 'நண்பர்'களும் உலாவப் புறப்பட்டவர்கள் ஆற்றங்கரைக்கு வந்து உட்கார்ந்தார்கள். வெகுநேரம் பேச்சுக்கு அப்புறம் கல்யாண விஷயத்தை ஒரு 'ஓலை'யாக விட்டார் சடகோப ஐயங்கார். கோபால் ஐயங்காரும் பரிபூரண சம்மதத்தோடு ஒப்புக் கொண்டார். இருவரும் சந்தோஷமாகவே முடிவு செய்து கொண்டார்கள். நட்பின் முதிர்ச்சி கோபால் ஐயங்காரை கல்யாணத்திற்கு சம்மதிக்கச் செய்தது. ஆனால் அவர் மனைவி ஒப்புக் கொண்டதற்கு வேறொரு காரணமும் உண்டு...........

இருவரும் வீடு திரும்பவில்லை.

ஞாயிற்றுக்கிழமை விடுமுறைக்காக ஊருக்கு வந்திருந்தான் வேணு. அவன் தாயார் ஏதோ பக்ஷணம் செய்துகொண்டிருக்கும்போது கல்யாணப் பேச்சை எடுத்தாள். அப்பொழுது ஆண்டாளை வேணுவுக்கு முடித்துவிட வேண்டும் என்ற எண்ணம் அவள் மனத்தில் உறுதியோடு இருந்தது.

காரணம்............

முன்னால் சொத்து சுகங்களோடு சந்தோஷமாக வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கையில், வாரீஸ் இல்லாத சில உறவினரின் சொத்துக்கள் கோபால் ஐயங்காருக்குக் கிடைத்தன. ஆனால் ஏழெட்டு வருஷங்களுக்கு முன் குளிக்கரை ஐயங்கார் ஒருவர் வாரீஸ் பாத்தியம் கொண்டாடினார். தர்க்கம், தாவா எல்லாம் கிளம்பின. ஹைகோர்ட் வரைக்கும் கேஸ் முட்டி விட்டது. கோபால் ஐயங்காரும் சடகோப ஐயங்காரும் செய்யாத 'ஜாலப் புரட்டுகள்' எல்லாம் செய்து பார்த்தும் குளிக்கரை ஐயங்கார் விடாக்

கண்டனாகத்தான் இருந்தார். வக்கீல்களுக்கும், அட்வகேட்டுகளுக்கும் ரூபாய் நோட்டுகள் போட்டி போட்டுக்கொண்டு பறந்தன. கடைசி முடிவில் குளிக்கரை ஐயங்காருக்குச் சாதகமான தீர்ப்பு ஆனது. அவருடைய உடைமைகளை அவர் பெற்றுக் கொண்டார். ஐந்து வருஷ கோர்ட்டு தாவாவில் "கோர்ட்டுக்குப் போனவன் ஓடு எடுப்பான்" என்று கிராமத்து ஜனங்கள் சொல்லிக்கொள்ளுவதுபோல் கோபால் ஐயங்கார் கைவீச்சு ஓய்ந்தது. முக்கால்வாசி சொத்துக்கள் எதிரிக்குப் போய்ச் சேர்ந்தன. மீதி இருந்த சொத்தின்மேல் இரண்டுமடங்கு கடன்—எல்லாம் கோர்ட்டு விஷயமாகச் செலவானது—சடகோப ஐயங்காரிடம் இருந்தது. முடிவாக கோபால் ஐயங்கார் குடும்பத்தின், ஜீவநாடி சடகோப ஐயங்காரின் 'கருணை' யில் ஓடிக் கொண்டிருந்தது.

இந்த நிலைமையில், தன் மகனுக்கு சடகோப ஐயங்கார் மகளைக் கொடுத்தால் குடும்பக்கடன் தொலைந்து க்ஷேமம் உண்டாகும் என்பது கோபால் ஐயங்கார் மனைவியின் கனவு. அந்த நம்பிக்கையில் தன் மகனை வற்புறுத்தினாள். ஆனால், துரதிர்ஷ்ட வசமாக அவனை நாகரிகப் படிப்பைக் கற்க விட்டது அவளுடைய கனவைப் பலிக்காமல் செய்து விட்டது! க்ஷயரோகியைக் கல்யாணம் செய்துகொள்ளக் கட்டோடு மறுத்துவிட்டான். நயத்தோடும் பயத்தோடும் வேண்டியவற்றையெல்லாம் செய்து பார்த்தாள். அவன் எவ்வளவு கீழ்ப் படிதலுள்ள பையனாக இருந்தபோதிலும் இந்த யோசனைக்கு இணங்கவில்லை. அவன் தாயார் இந்த, அவனுடைய மறுப்பை வெளிக் காட்டாமல் மூடி வைத்தாள். விஷயம் வெளியே போனால் சடகோப ஐயங்காரின் திருவிளையாடல்கள் எவ்வளவு தூரம் ஆட்டம் போகும் என்று அவளுக்குத் தெரிந்துதான் இருந்தது.

வெளியே போய்விட்டு வந்த கோபால் ஐயங்கார். தம் மகனிடம் விஷயத்தைப் பிரஸ்தாபித்தார். அவன் வழிக்கு வருவதாகத் தெரியவில்லை. தன் பெற்றோர்களின் மூடத்தனத்தைக் கண்டு கண்ணீர் விட்டு அழுதான். தகப்பனாருக்குக் கொஞ்சம் மனம் இளகியது. கொஞ்ச காலத்துக்கு, குடும்பக் கஷ்டத்தை உணருகிற வரைக்கும் அப்படித்தான் இருப்பான் என்று மனதைத் தேற்றிக் கொண்டார். ஆனால், அவளுக்குத் தன் மகனுடைய மறுப்பு பேராசைத் தீயில் நெய்விட்டதுபோல் இருந்தது.

சடகோப ஐயங்காருக்கு காலத்தின் போக்கு நன்றாகத் தெரியும். இந்தக்காலத்தில் 'நாலு' இங்கிலீஷ் எழுத்து படித்த எவனும் க்ஷயரோகியைச் சீந்தமாட்டான் என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. ஆனால், தம் 'கருணை' யில் ஜீவனம் நடத்திக்கொண்டு வந்த கோபால் ஐயங்கார் குடும்பம், ஆட்டி வைக்கும் பாவையாக இருக்கும் பொழுது, அதிலும் அவருடைய மகன் பத்தாவது வகுப்பு வரையிலும் படித்தவனாகயிருக்கும்போது, ஒரு அனாதி-முட்டாளைத் தேடிப்பிடித்து கல்யாணம் செய்து கொடுத்து விட்டோம் என்ற பேருக்குத் தம் மகளைக் கட்டிக் கொடுக்கவேண்டும் என்ற அவசியம் என்ன வந்தது? நினைத்தால் ஒரேநாளில் கோபால் ஐயங்கார் வயிற்றில் மண்ணைப் போட்டு விடலாம். எவ்வளவோ சீக்கிரத்தில் சொத்துக்களைத் தம் கைக்கு மாற்றும் சக்தி யிருக்கும் அப்படிப்பட்ட சமயத்தில் எந்தக் கோழைக்கும் தைரியம் கொடுக்குமே!

"ஊர் வாயை மூட முடியாது" என்ற பழமொழியைப் பொய்ப்பிக்க வேண்டுமானால் சில பெண்களின் ஒத்தாசையும் தேவை. அவர்கள் வாய் ஒழுக விட்டுக் கொண்டிருக்கும் மட்டும் அந்த பழமொழி சாகாது. எப்படியோ, வெகுதூரத்தில் கேட்கும் கூச்சல் காற்றில் அசைந்து பற்பல எதிரொலிகளின் சுருதியோடு கேட்கும் மாதிரி வேணுவின் கல்யாண மறுப்பு சடகோப ஐயங்கார் காதில் விழுந்தது. அவனை இனித் திருப்ப அவன் தகப்பனாரால் முடியாது என்பதையும் தெரிந்து கொண்டார். ஆனால் நல்ல வேளையாக அவர் திடீரென்று ஒன்றும் செய்து விடவில்லை. அவர் மனம் மகா பயங்கரமான பொறாமையைச் சாதிக்கத் துணிந்தது. வேண்டுமென்றே கொடிய நோக்கத்தை, தகரக்குழாயில் வெடிமருந்தைத் திணித்து வைத்தமாதிரி, மூடி வைத்தார். அது வெடிக்கும் நாள் எந்நாளோ?

கோபால் ஐயங்காரைப் போக்கில் விட்டுக் கவிழ்க்கும் எண்ணம் அவர் மனதில் இடங் கொண்ட சமயம்; கெட்ட சிந்தனையின் கனல் உள்ளேயே வளர்க்கப்பட்ட காலத்தின் நடுவே...........

'ஏறவிட்டு ஏணி யெடுக்க'த் துணிந்த அன்று, வேணு காலேஜுக்குப் படிக்கப் புறப்பட்டபோது சந்தோஷமாக நடித்துக்கொண்டே அவனைத் தம் 'நண்ப'ரோடு சென்று வழியனுப்பி விட்டு வந்தார். இந்த சூழ்ச்சியெல்லாம் கோபால் ஐயங்கார் குடும்பத்துக்கு ஏன், மாடசாமி பிள்ளையைத் தவிர்த்த அவ்வூரார் எல்லோருக்குமே அணுவளவும் தெரியாது.

3

சென்னைக்குப் புகைவண்டி போய்ச் சேரும் வரைக்கும் அந்த வைதிக வேணுவின் மனதில் பட்டதாரி ஆகும் ஆசை, உத்தியோகக் கனவு எல்லாம் தோன்றிக்கொண்டேயிருந்தன. இன்னும் பல எண்ணினான். சடகோப ஐயங்கார் மகள் விஷயம் அவனுக்கு நஞ்சாக இருந்தது. அதை நினைக்கையில் அன்றுதான் முதல் முதலாக அவன் மனத்தில் கடன் பயம் தோன்ற ஆரம்பித்தது.

4

காலேஜில் இரண்டாவது ஆண்டு வாழ்க்கை, வேணு முக்கால்வாசி மாறி விட்டான். ஆங்கில முறையின் வழக்க ஒழுக்கங்கள் அவனைக் கவர்ந்தன. மனோரம்மியமாகக் காலத்தைக் கழித்தான். "திருப்பாவை"யைப் பக்தியோடு பாடிய நாட்களும், நெற்றியில் திருமண் சாத்திக்கொண்ட ஆசாரமும் எப்பொழுதோ கனவில் கண்டவை மாதிரி மறைந்தன. வேண்டிய நேரத்துக்குப் பணத்துக்கு எழுதுவான். எப்படியும் வந்து சேரும். பட்டண வாசம், பணத்தின் தாராளச் செலவு இரண்டும் சேர்ந்து வாலிப வாழ்க்கைக்கு ஒளி யூட்டின. உயர்ந்த பட்டுத்துணிகள், ஜமீன்தார் பிள்ளைகளின் சிநேகிதம், கூத்துச் சாலைகளுக்கு அடிக்கொரு தடவை விஜயம் செய்வது, இப்படியாக அவன் வாழ்க்கை ஓடிக்கொண்டிருந்தது. அந்த வாழ்க்கைத்திரையின் மறுபுறத்திலே.................

வட்டியும் முதலுமாக கடனில் பாதியைக் கழித்து விட்டார் கோபால் ஐயங்கார். அவர் நன்செய் விளைச்சல் மகனுக்குப் படிப்புச் செலவுக்கு, தம் குடும்ப சம்ரக்ஷணைக்கு கொஞ்சம் கொஞ்சமாக கடனைக் கொடுக்க சரிக்கட்டி வந்தது. இது எவ்வளவோ கவனமான மேற்பார்வையில் நடந்துவந்தது;

வேணுவின் வருஷாந்திரப் பரீக்ஷைக்கு இரண்டு மாதங்க ளிருக்கின்றன. கோபால் ஐயங்கார், உடம்புக்கு என்னவோ செய்கிறதென்று வந்து படுத்தார். அந்த தெய்வபக்தரை, அவரில்லாவிட்டால் குடும்பம் சிதைந்து மாய்ந்து விடும் என்று தெரிந்தும் யமன் அவர் உயிரைக் கொண்டுபோகக் கூசவில்லை.

தந்தையின் மரணச் செய்தி வேணுவுக்கு அறிவிக்கப்பட்டது. அவனும் இரண்டு மூன்று நாட்களுக்குத் தன் கேளிக்கைகளைக் கட்டாயப் படுத்தி நிறுத்திவிட்டு ஊர்வந்து சேர்ந்தான்.

கோபால் ஐயங்கார், நல்ல மனுஷர்; நன்றாகப் பிழைத்துக் கெட்டவர்; மகனுக்கு ஒரே ஆதாரவாய் இருந்தவர் என்று பலவிதமாய் பேர் வாங்கிக் கொண்டு போய்விட்டார். சடகோப ஐயங்காருக்குத் தம் மனோபீஷ்டம் நிறைவேற அவாது தெய்வம் இந்த ஒரு சந்தர்ப்பத்தையும் கொடுத்தது. அவருடைய பொறுமையும் 'கருணை'யும் நீட்டித்துக் கொண்டிருந்தன.

கோபால் ஐயங்கார் மனைவி, வேலைக்காரர்களின் உதவியால் நன்செய் விவசாயத்தைக் கவனித்து வந்தாள்.

## 5

மாடசாமி பிள்ளை, சடகோப ஐயங்காரின் கணக்கர்; அந்தரங்கக் காரிய தரிசி ஐயங்கார்வாளின் உள்ளக் கிளர்ச்சிகளைத் தூண்டி விட்டுக்கொண்டே காரியத்தை முடிப்பதில் சமர்த்தர். அவர் ஒரு நாச காரியத்துக்குக் கத்தி நீட்டினால் அதில் பாஷாணத்தை வைத்துத் தீட்டச் சொல்வார். இயற்கையின் படைப்பில் ஒரே மனோபாவம் கொண்ட இரண்டு ஆத்மாக்களும் பொருந்திக் கொண்டது ஆச்சரியமல்ல. பிள்ளை யவர்கள் தேவாரப் பண்களோடு பகவானிடம் உருகுவது ஐயங்காரின் திருவாய் மொழிப் பாராயணத்திற்கு இளைத்ததில்லை. ஒருவருக்கொருவர் மத விஷயத்தில் விட்டுக் கொடுத்துக் கொள்வார்கள்!

ஒருநாள் காலையில் அவசர அவசரமாக ஐயங்கார் கூப்பிட விட்டார் என்று சடகோப ஐயங்கார் வீட்டுக்குப் போனார்.

வீட்டில்........

இரும்புப்பெட்டி ஐயங்காரின் இடது கைப்புறம். அவருக்கு எதிராக இருந்த தம் ஆசனத்தில் போய் அமர்ந்தார் கணக்குப்பிள்ளை. அவருக்கு முன்னால் சம்பிரதாயமாய்க் கிடக்கும் சாய்வுப் பலகை, மாக்கட்டையில் குழிதோண்டிப் பதித்த 'மணம்' கமழும் பழைய மைக்கூடு, ஒரு பேனா இவை யாவும்.

மெல்லிய குரலில் பேச்சுக்கள் நடந்தன.

"பயலுக்கு எப். ஏ. பரீக்ஷை பாஸ் ஆய்ட்டதாமே."

"யாருக்கு, வேணுவுக்குத்தானே?"

"உம்......"

"ஆயிருக்கும்......"

"இந்த மட்டில் அவனை நிறுத்தினால், நம்ம காரியம் நடக்க வேண்டுமே?"

"அப்படின்னு?"

"அவன் இது வரைக்கும் தன் அப்பன் சம்பாத்தியத்திலே தானே படித்து வந்தான்?"

"ஆமாம்; அதற்கென்ன?"

"இல்லே, இப்போ அவன் படிப்பை நிறுத்திவிடச் செய்வது பெரிய காரியமில்லே. அப்படிச் செய்தால் பேசாமல் வீட்டுக்கு வந்து அந்த விதவை மூண்டையையும் (வேணுவின் தாயாரை) கூட்டிக்கொண்டுபோய் எங்கேயாவது ஒரு கணக்கு எழுதியாவது பிழைக்கத்தான் பார்ப்பான்."

"சரி; அவன் மேல்கொண்டு படித்தால் நமக்கு என்ன லாபம்?"

"கேளும். முதலிலே நன்செய்களையும் வீட்டையும் கைவசப்படுத்தணும்."

"சரி, செய்தாச்சு."

"பிறகு, அவன் படிப்பில் நாம் அக்கரை கொண்டமாதிரி, அவன் பி. ஏ. படிச்சு வருகிற வரைக்கும் ஆகும் செலவை இனமாகக் கொடுத்த மாதிரி கொடுக்கவேண்டும்."

"அப்படிக் கொடுத்தால் நமக்கு என்ன லாபம் என்கிறதுதானே விளங்கவில்லே."

"அது தான் சொல்றேனே, பயல் என்ன இருந்தாலும் படிச்ச பயலில்லேயா? 'எதை நம்பி நமக்கு இப்படி படிப்புக்காகப் பணங் கொடுத்தார்?' என்று யோசிக்கத்தானே செய்வான். அப்போது நாம் ஒன்று சொன்னால் தட்டவா போகிறான்? கேட்கல்லேன்னு சவம் தெருத்தெருவாய் பிச்சையெடுத் தலையறது. இந்த காலத்திலே எவன் உத்தியோகத்தை வைத்துக் காத்துக் கொண்டிருக்கான்?"

"சாமி, நீங்கள் சொல்வது ஞாயந்தான். பின்னால் அவனுக்கு என்ன சொல்லப் போகிறீர்கள், அவன் தட்டமாட்டான்..........?"

"அதுதானே ஓய், நம்ம நினைச்ச காரியத்தை இந்த பிச்சைக்காரக் கழுதைகளிடத்திலே முடிக்காமல் போனால் நமக்கு என்ன கௌரவம் என்கிறேன். எப்படியும் நம் குழந்தையை அவன் கழுத்தில் கட்டி அவனை நம் கைக்குள் கீழே வைத்துக் கொள்ளவேண்டும். என்ன இருந்தாலும் கழுதை படிச்சிருக்கா இல்லேயா, அதுக்காகத்தான் எனக்கு இவ்வளவு வைராக்கியம்."

"நல்லது. அப்போ கோர்ட்டிலே தாக்கல் செய்யவேண்டியது தானே?"

"அது விஷயமாய் யோசிக்கத்தான் உம்மைக் கூப்பிட விட்டது."

யோசனைகள் பற்பல பிரதேசங்களில் சஞ்சரித்தன. கடைசியில் அவர்கள் தீர்மானம் செய்த முடிவுக்கு வர, வேண்டிய ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கினர்.

அடுத்த இதழில் முடிவு.

# "நிழலருமை வெய்யிலிலே"

(குரு.)

தென்றல் காற்று எங்கள் வீட்டு மாடியில் வீசிக் கொண்டிருந்தது. நான் மகிழ்ச்சியுடன் உள்ளங்கியையும் (பனியன்) கழற்றிவிட்டு அநுபவித்துக் கொண்டிருந்தேன். நாளெல்லாம் வெய்யிலில் சுற்றி வந்த எனக்கல்லவா அத் தென்றலின் அருமை தெரியவரும். என் நண்பன் வேங்கடசாமி அதுவரை தூங்கிவிட்டு வந்தவன் என் கோலத்தைக் கண்டு கேலி செய்தான். எனக்கு வந்த ஆத்திரத்தில் அவனை எங்கள் வீட்டின் ஓர் அறையில் விட்டு மூடி விட்டேன். "கொஞ்சநேரம் இங்கிருந்துவிட்டுப் பிறகு மேலே வா" என்று கூறிவிட்டு மாடிக்குப் போய் காற்றாட அமர்ந்து கொண்டேன். சுமார் ஒருமணிநேரம் கழிந்தது. கீழே இறங்கி நண்பனைக் கூப்பிட்டேன். கதவை எப்பொழுது திறப்பேனென்று எதிர் பார்த்த அவன் ஒரே ஓட்டமாக ஓடி வந்தான். உடலெல்லாம் வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. 'என்ன செய்தேனென்று இப்படி சுண்ணாம்புக் காளவாயில் என்னை மூடி வைத்தாய்" என்றான் கோபத்தோடு.

"பிறகு சொல்லுகிறேன். முதலில் மேலே போய்க் காற்று வாங்கலாம், வா"

மேலே வந்தவுடன் "அப்பாடா, என்ன குளிர்ச்சி! காற்று அருமையாக இருக்கின்றது.!" என்று அநுபவித்து அமர்ந்தான். ஏற்கனவே சட்டை, பனியன் எல்லாம் கழற்றிவிட்டான்.

நான்:—'இப்பொழுது என்னைக் கேலி செய்ய மாட்டாயல்லவா? நாளெல்லாம் வெய்யிலில் அலைந்த களைப்பு நீங்க வேண்டுமென்று பனியனைக் கழற்றிக் காற்றாட உட்கார்ந்திருந்தால், 'பனியனைக் கூடக் கழற்றி விட்டாயே' என்று கேலி பண்ணினாயே. எனக்கல்லவா தெரியும் அந்தச் சுகம். சும்மாவா சொன்னார்கள், 'நிழலருமை வெய்யிலிலே' என்று.

வேங்.—அது போகட்டும். அன்று நம் ஆசிரியர் 'நிழலருமை வெய்யிலிலே' என்ற பாட்டைச் சொன்னாரே. உனக்கு நினைவிருக்கிறதா? அதைச் சொல்லேன்.

நான்:—

நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்; ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டில் சோமன் கொடையருமை
புலவரிடத் தேயறிமின் போய்.

வேங்:—பாட்டில் தவறு இருக்கின்றது. அதை உன்னால் கண்டு பிடிக்க முடியுமா?

நான்:—பெரிய அறிவாளியல்லவா? பாட்டில் தவறு காண வந்து விட்டாயே! போ போ பயித்தியம்.

வேங்:—ஐயா, பண்டிதரே! நான் பயித்தியக்காரன் தான். தாங்கள் தான் பொருள் சொல்லுங்களேன் பார்க்கலாம்.

நான்:—என்ன பிரமாதம்! ஆசிரியர்தான் சொன்னாரே. மறந்து போய் விட்டதென்று சொல்லேன். என்னமோ என்னைச் சோதிக்கப் போவது போல் கேட்கின்றாயே.

வேங்:—சரி, அப்படித்தான் வைத்துக் கொள்ளேன். சொல்லப்பா, சொல்லு. எப்படியாவது பொருள் சொன்னால் சரிதான்.

நான்:—வெய்யிலில் செருப்பும் குடையு மில்லாமல் நிலையாக நின்று பார்த்தால் தான் நிழலினுடைய அருமை தெரியவரும். நிழலிலேயே இருப்பவனைவிட வெய்யிலி லிருந்து வந்தவன் தான் நிழலை அதிகமாக அநுபவிப்பான். இதைத் தான்,

'நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்'

என்று கூறினார்.

இப்பொழுது கூறியது நாம் அனுபவித்து அறிந்துகொள்ளக் கூடியது. அடுத்தாற போல வருவது பெரியோர்கள் கூறுவதி லிருந்து உய்த்து உணர்ந்துகொள்ள வேண்டியது. இங்கே இந்த உலகத்தில் நாம் அநுபவிக்கிற வினைத் துன்பங்களி லிருந்து ஆண்டவனுடைய திருவடிப் பேற்றின் பெருமையினை அறிந்து கொள்ளலாம் என்பதை,

"..............................ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்"

என்று கூறி யிருக்கின்றார். இந்த உண்மையை உணர்ந்து கொள்ளப் பெரியோர்கள் கூறி வைத்திருக்கின்ற நூல்களிடத்து நம்பிக்கை வேண்டும். அந் நூல்களை நம்பாதவர்களுக்கு இவ்வுண்மையும் விளங்காது.

'இனி வருவது நன்றாகத் தெரியும்:

—பழுத தமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டில்'

இது எளிதாகத் தெரிந்துவிடும். 'நாலிரண்டு' என்று குறிப்பது நாலடியாரையும் திருக்குறளையும். தமிழ்ச் சொற்களினுடைய அருமைப்பாடு தெரிய வேண்டுமானால் நாலடியார், திருக்குறள் இரண்டையும் படிக்க வேண்டும்.

இதுவரை கூறிவந்த மூன்றையும் ஆசிரியர் பின்னால் கடைசியாகக் கூறப் போவதற்குத் துணையாகத் தான் வைத்திருக்கின்றார். தாம் கூறக் கருதிய உண்மையைக் கடைசியில் கூறுவது தான் கவிகளின் மரபு.

'நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்; ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்;—பழுத தமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டில்'

என்று மூன்று உண்மைகளைக் கூறிவிட்டுக் கடைசியாகச்

'சோமன் கோடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்'

என்று கூறுகின்றார். இந்த உண்மையைத் தான புலவர் தெரிவிக்க விரும்பினார். ஆனால் மொட்டையாகச் சொல்லாமல் உவமைகளோடு

காட்டுவது தமிழ் அறிஞர்களின் வழக்கமல்லவா? அதனால் தான் மூன்று உவமைகள் சொல்லிக் கடைசியாக 'எங்கள் சோமனுடைய வள்ளன்மையின் பெருமையை அறிய வேண்டுமானால் அரப்பத்தனமுடைய செல்வர்களிடம் கட்டாயம் போய் இரந்து அவர்களால் ஏற்படும் துன்பங்களை அநுபவித்துப் பாருங்கள்' என்று கூறுகின்றார். பாட்டைப் பாடிய புலவர் தம் அநுபவத்தை அப்படியே இந்த வெண்பாவில் மெய்ப்பாடு தோன்றக் கூறியிருக்கின்றார்.

இவ்வளவுதானப்பா, இந்தப் பாட்டு. சொல்லு சொல்லு என்றாயே, சொல்லி விட்டேனா இல்லையா? இது பிரமாதமா என்ன?

வேங்:—உனக்குப் பிரமாதமானது தான் ஒன்றுமே கிடையாதே. ஆசிரியர் சொன்னதை அப்படியே ஒப்பித்து விட்டாயே! சமர்த்துதான். ஆனால் இந்தப் பாட்டில் வெளிப்படையாக இருக்கும் தவறைக் கூட நீ கண்டுகொள்ளவில்லையே.

நான்:—எப்பொழுதும் இந்தத் தன்முனைப்பு உன்னை விட்டுப் போகாதா? ஆசிரியரைவிட உனக்கு என்ன மூளை வந்துவிட்டது?

வேங்:—வீண் கதை பேசுவானேன்? இந்தப் பாட்டில் தப்பு இருக்கத்தான் செய்கின்றது. தவறை எளிதில் திருத்தியும் விடலாம். திருத்தி விட்டால் பாட்டு அருமையாக இருக்கும்.

நான்:—ஐயா. புலவரேறே! கருணைகூர்ந்து இப் பாட்டினகத்தே தோன்றாநிற்கும் பிழையினை நீக்கித் திருத்தியமைக்கத் திருவுளம் பற்றலாங்கொல்லோ?

வேங்:—நீ கேட்டாலும் கேட்காவிட்டாலும் சொல்லத்தான் போகின்றேன். பாட்டிற்கு மறுபடியும் போகலாம். பாட்டில் நான்கு கருத்துக்கள் இருக்கின்றன அல்லவா? முதலில் கூறப்படுவதென்ன? 'நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்' என்பது. நிழலும், வெய்யிலும் எதிரிடையானவைகள். அப்படியே அடுத்த உவமையிலும் ஈசன் கழலும், வெவ்வினையும் எதிரிடையானவைகள். மூன்றாவது கருத்தை இப்போதைக்கு விட்டுவிட்டு கடைசிக்குப் போவோம். 'சோமன் கொடையருமை புல்லரிடத்தே யறிமின் போய்' என்பதிலும் எதிரிடையான பொருள்களே கூறப்பட்டன. ஆனால் மூன்றாவது கூறியதில் 'பழந்தமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்' எனறல்லவா இருக்கின்றது? பாட்டின் சந்தர்ப்பத்தையும், போக்கையும் வைத்துப் பார்த்தால் திருக்குறளையும் நாலடியாரையும் படித்தால் தமிழ்ச் சொற்களிடத்தே வெறுப்பு ஏற்படுமென்றல்லவா ஆகும்? அவற்றிலுள்ள சொற்கள் கடுமையானவா என்ன? திருக்குறளையும் நாலடியாரையும் படித்தால் தமிழருமை தெரியும் தான். ஆனால் இந்தப் பாட்டில்—இந்தச் சந்தர்ப்பத்தில் அப்படியா புலவர் கூறுவார்? அப்படிக் கூறினால் திருக்குறள் நாலடியார் இரண்டும் வெறுக்கத் தக்கனவாக இருக்கவேண்டுமல்லவா?

நான்:—ஆமாம், நீ சொல்லுவதும் சரியாகத்தானிருக்கிறது. ஆனால் இந்த எண்ணங்களெல்லாம் ஆசிரியர் சொல்லும் போது ஏன் தோன்றவில்லை?

வேங்:—அதுதான் நாம் படிக்கும் படிப்பு. ஆசிரியர் என்ன சொன்னாலும் கேட்டு அப்படியே பிடித்துக்கொள்ள வேண்டியது. அதுதான் நாம் சிறு வயதிலிருந்தே கற்றுக்கொண்ட பாடம்

நான்:—அது இருக்கட்டும். இதைத் திருத்திவிட்டால் நன்றாக இருக்கும் என்றாயே. எப்படித் திருத்துவது?

வேங்:— நாலிரண்டில்' என்பதை 'ஆரியத்தில்' என்று திருத்திவிடு. திருத்திவிட்டால்,

"நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின்; ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்,—பழுதமிழ்ச்
சொல்லருமை ஆரியத்தில், சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்"

என்று பாட்டு பொருள் முரண்பாடில்லாமல் விளங்கும் இந்தப் பாட்டு இனிய ஒலி, அறுதியிட்டுச் செல்லும் செலவு, சிறிய சொற்கள் முதலியவற்றிலும் சிறந்த ஒன்று. இப்படிப்பட்ட பாட்டை இடைக் காலத்தில் யாரோ ஒரு 'பெரியவர்' 'ஆரியத்தில்' என்பதை 'நாலிரண்டில' என்று திருத்திவிட்டார். கொஞ்சம் எண்ணிப் பார்த்து வேறு வகையாகத் திருத்தியிருக்கக் கூடாதா? 'ஆரியத்தைக் குறை கூறவாவது' என்று மட்டும் எண்ணினரே தவிர சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி திருத்த வேண்டுமே யென்று எண்ணவே இல்லை. பாவம், அவர் ஒரு வகையாக நினைக்க, இன்னொரு வகையில் அவர் எண்ணம் ஈடேறவில்லை.

நான்:—ஆமாம், உனக்கு எங்கிருந்து இந்த மூளை வந்ததப்பா?

வேங்:—இந்தப் பாட்டுக்கள் சம்பந்தப்பட்ட வரையில் நீயும் நானும் ஒன்றுதான். தமிழில் உள்ள நல்ல பாட்டுக்களை அருமையாகத் தெரிந்து அதைவிட அருமையாக எடுத்துச் சொல்லத் தமிழ்நாட்டில் ஒரு பெரியவர் இருக்கின்றார். அவர் செய்த திருத்தம் தான் இது. திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் நேற்று ஓர் இடத்தில் செய்த சொற்பொழிவிலிருந்து இந்தத் திருத்தத்தைத் தெரிந்து கொண்டேன். இப்படியாக அவர் பல நல்ல 'திருத்தங்களை'ச் செய்திருக்கின்றாராம். அவற்றைத் திருத்தங்கள் என்று சொல்லுவதே தவறு. முதலில் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும்; பிறகு யாரோ 'நல்லவர்கள்' மாற்றிவிட்டார்கள். ஆகவே தவறைத் திருத்தினால் 'திருத்தம்' என்று எப்படிச் சொல்லுவது? உண்மையான உருவத்தைக் கொடுத்தார் என்று தான் கூறவேண்டும். இப்படிப்பட்ட அருமையான தொண்டைச் செய்யும் பெரியவரைப் பெற்றதற்காக நாம் மகிழவேண்டு மல்லவா?

நான்:—அதற்கென்ன சந்தேகம்; இதுதான் சிறந்த தமிழ்த் தொண்டு அதை மற்றொரு தடவை இசையோடு பாடு. தென்றலோடு தென்மொழிப் பாட்டையும் கேட்டு மகிழலா மல்லவா?

வேங்:—"நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின் ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழுதமிழ்ச்
சொல்லருமை ஆரியத்தில் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்."

# இதுதான் தமிழ்த் தொண்டு

(இரகுநாதன்.)

வைகாசி மாத "ஆனந்தபோதினி" இதழில், "எது தமிழ்த் தொண்டு?" என்ற ஒரு கட்டுரை வந்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம். அதில் அன்பர் S. நாராயணன் அவர்கள் திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியாரைப்பற்றித் தாக்கி எழுதியுள்ளதும் நேயர்களுக்கு மறந்துவிடக்கூடிய விஷயமல்ல.

திரு. டி. கே. சியின் தமிழின் போக்கைக்கண்டு, புலவர்கள், பண்டித மேதாவிகள் எல்லாம் இன்றும், "தமிழ்க்கொலை! தமிழ்க்கொலை!" என்று கதைத்துக் கொண்டிருக்கிறார்கள். நண்பர் நாராயணன் எழுதுகிறார்.

"சிலர் நந்தம் அமிழ்தினுமினிய தீந்தமிழைச் சீர்திருத்தத் தலைப்பட்டிருக்கின்றனர். அன்னவர்கட்குத் தமிழின் வளர்ச்சியைப்பற்றி, ஒரு சிறிதும் கவலை கிடையாது. ஆனால், தமிழுக்கே இல்லாத, புதுமுறைகளைக் கொண்டுவந்து புகுத்துவதில அவர்கள் பெரிதும் பங்கெடுத்துக் கொள்கின்றனர். அவர்கள் சீர்திருத்தமெனும் போர்வையில் மறைந்துகொண்டு தமிழ் மொழியைக் கொலைசெய்து வருவது. நந்தமிழ்மொழியின் தவக்குறைவேயாகும். அத்தகைய மாபெரும் கைங்கர்யம் செய்து வரும் பெரியாருள் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரும் ஒருவர்."

திரு. டி. கே. சி தமிழைச் சீர்திருத்துகிறார்; பண்படுத்துகிறார். வாஸ்தவம். ஆனால் தனிப்பட்ட சிலரின் கைக்குள்ளே அகப்பட்டுக்கொண்டு, சீர்கேடடையும் தமிழ் அன்னையை, தமிழன் ஒவ்வொருவனுக்கும் அறிமுகப்படுத்தி வைக்கிறார். தமது தாயின் நிலைமையைக் கண்டு, அவளைக் காப்பாற்றத் தூண்டுகிறார். ஏதோ ஒரு சிலர் அனுபவத்திற்குள் பயன்படும் விதமாக, அவர் எழுதவில்லை. தமிழ்நாட்டிலே பிறந்த, தமிழன் என்று உரிமை கொண்டாடுகின்ற ஒவ்வொரு தமிழனுக்கும், அவர் தமிழை அள்ளி வழங்குகிறார். பண்டித சிகாமணிகளைப்போல, தமிழ் எல்லோருக்கும் பொதுவாகி விடக்கூடாது என்று அதை இரும்புப் பெட்டியிலே வைத்து, மூடிப் பூட்டி 'ஸீல்' வைக்கிற வழக்கம் அவரிடம் கிடையாது.

திரு. டி. கே. சி ஒரு போர்வையிலும் மறையவில்லை. முன்னாலே நின்று பேசுகிறார். ஒளிவு மறைவு வியாபாரமே அவரிடம் கிடையாது. தமிழை அவர் கொலை செய்யவில்லை; ஆனால், கொலை செய்கின்ற கொடும்பாவிகளிடமிருந்து, அவர் மல்லுக்கட்டித் தமிழ்த்தாயை மீட்கிறார்! ஒவ்வொரு தமிழனுக்கும் அவனது தாய் அன்பை எடுத்துக் காட்டுகிறார்.

திரு. முதலியார் செய்யுள்களைத் திருத்துகிறார் என்று நண்பர் நாராயணன் கூறுகிறார். ஆம். திருத்துகிறார். சும்மா கண்ணை மூடிக்கொண்டு அவர் திருத்தவில்லை. தக்க காரணங்களுடன் அவர் திருத்துகிறார்.

இன்று நமது கையிலே இருக்கின்றதே கம்பராமாயணம். இதில் உள்ள முழுதும் கம்பனே பாடிய பாட்டுக்கள் என்று உறுதிகூற முடியுமா? ஏதோ ஏட்டுப் பிரதியிலிருந்து கிடைத்ததை வைத்து, அச்சுப் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். ஆனால், அச்சுப் புத்தகங்களில் உள்ள வார்த்தை

கள் சரியான வார்த்தைகள் தான் என்று யாராயினுஞ் சொல்ல முடியுமா? பண்டைக்கால ஏடுகளில், எத்தனையோ இடங்கள் செல்லரித்துப்போனதெல்லாம் நமக்குத் தெரியும். சில பாடல்களில் ஒன்றிரண்டு வார்த்தைகளே, கரையான்களுக்கு இரையாகி விடுகின்றன. அப்படிப்பட்ட இடங்களிலெல்லாம், அதைக் கண்டெடுத்த புலவர்கள் தமது சொந்தச் சரக்கை, எதுகை மோனை, யாப்பு, முதலியவைகளுக்குப் புறம்பாகாமல், அமைத்துக் 'கட்டி' விட்டார்கள். அதனால், அந்த வார்த்தைகள் எல்லாம் கம்பனுடைய வார்த்தைகள் தான் என்று எவரும் உத்தரவாதம் அளிக்க முடியாது.

இதனால் தான், தமிழில் ஒவ்வொரு பாட்டுக்கும் 'ஆயிரத்தெட்டு' பாடபேதங்கள் இருக்கின்றன. டி. கே. சி. என்ன செய்கிறார்? ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு பாட பேதங்களையும் வைத்துப் பார்க்கிறார் அவ்வளவு பாட பேதங்களிலும் ஒன்றாவது உண்மையான கவிதா உணர்ச்சியை எழுப்பாவிட்டால், தனது வார்த்தை ஒன்றைப் போடுகிறார். துலாக்கோலில் பிடித்து நிறுத்துப் போட்டமாதிரி இருக்கும், அந்த வார்த்தை. இப்படிப் போடும்போது, அந்தப் பாட்டு ஒரு புது உற்சாகத்துடன் துள்ளிக் கூத்தாட ஆரம்பித்து விடுகிறது.

திரு. டி. கே. சி. பாட்டுக்களை எந்தக் காரணங்கொண்டு திருத்துகிறார் என்றால், அவர் உண்மையான கவிதையைக் கண்டு பிடிப்பதற்கு, உண்டாக்குவதற்கு முக்கியமானது தாளலயந்தான் என்கிறார். ஆங்கிலத்திலே சொல்ல வேண்டுமானால், Rhythm என்கிறார். உள்ள உணர்ச்சிகளை அப்படியப்படியே அடித்துக் காட்டுவது தாளம். அந்தத் தாள லயத்திலே தான் இருதய பாவம் நிறைந்து இருக்கிறது என்கிறார். இந்தக் கருத்தினால் தான் அவர் பாட்டைத் திருத்துகிறார்.

மேலும், இலக்கண விதிகளுக்கு, திரு. டி. கே. சி. புறம்பாகப் போகிறாரென்றும், அது தமிழர் யாவராலும் மன்னிக்க முடியாத குற்றமென்றும் நண்பர் சொல்லுகிறார்.

திரு. டி. கே. சி. இலக்கண விதிகளுக்குப் புறம்பாகப் போகிறார் என்பதற்கு நண்பர் இரண்டு மூன்று உதாரணம் காட்டுகிறார். டி. கே. சி. என் பதங்களை, இப்படிப் பிரித்துப் போடுகிறார் என்பதற்குக் காரணம் கேளுங்கள். இலக்கண விதிகளுக்கு ஒத்து நடந்தால் சில சமயங்களில் தமிழ் வார்த்தைகள் காதுகளுக்குக் கேட்கக் கர்ண கடூரமாய் இருக்கின்றன. 'இனிமை' என்று பெயர்பெற்ற தமிழ்தானா? என்ற சந்தேகம் கூடத் தோன்றி விடுகிறது.

உதாரணம்:—

(1) முள்+தாள்+தாமரை என்ற வார்த்தைகள்,
முட்டாட்டாமரை என்று புணர்ந்து விடுகிறது.

(2) முன்+தைத்து விட்டது என்பவை
முட்டைத்து விட்டது என்று மாறி விடுகின்றது.

மேற்கண்ட இரண்டிலும் ஏதாவது உயிர் இருக்கிறதா? அர்த்தந்தான் நமக்குப் புலப்படுகிறதா? இதனால் திரு டி. கே. சி போல்+கருணை என்பதை, போல்க்கருணை என்று புணருகின்றார். நூற்கடல் என்று புணர்ந்த

காரணம், எதுகையை எடுத்துக்காட்டவே யாகும். நான்+கூட்டிய என்பதையும், நாட் கூட்டிய என்று புணராமல் நாளீக் கூட்டிய என்று புணருகின்றார் அவர் பதம் பிரித்துப் போடுதலின் காரணம் இதுதான். பண்டிதமணிகள் தமிழ்ப் பதங்களை இப்படி யெல்லாம் சிதைக்கிறார்களே, அதிலிருந்து தமிழைக் காப்பாற்றத்தான்.

"பழையன கழிதலும், புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே!"

என்பதல்லவா, நன்னூல் சூத்திரம்!

பால காண்டத்தில், கை யடைப்படலத்தில் கம்பன் விஸ்வாமித்திர மகரிஷியை,

"எண்ணிலா வருந் தவத்தோன்" என்று புகழுகிறான். இந்தப் பதத்தை, சமீபத்தில் ஒரு பண்டித சிகாமணி, புளியங்குடி கம்பன் கழகத்தில் கொலை செய்த விவரத்தைக் கேளுங்கள். ஒரே பதத்தை அவர் வெட்டி யெறிகிற அழகைப் பாருங்கள்:

(1) "எண் இலா அரும் தவத்தோன்."

—எண்ணில்லாத அரும் தவங்களைச் செய்தவன். இதுதான் சரியானது.

அவர் இதையும் கூறி, இன்னும பிரித்தார், பிரித்தார், ஒரே யடியாக.

(2) "எண்ணில் ஆ வரும் தவத்தோன்" என்று.

எப்பவோ ஒரு தடவை விஸ்வாமித்திரன் காமதேனுப் பசுவை ஒரு பெருந்தவம் செய்து அடைந்ததாகக் கதை. இதைக் கம்பன் நினைத்துக் கொண்டுதான் விஸ்வாமித்திரன் நினைத்தால், பசு வரும் என்று சொல்லுகிறானாம்.

(3) "எண் இல் ஆ வரும் தவத்தோன்"

எண்ணில்லாத பசுக்கள் வரச் செய்யக்கூடிய தவத்தோன்.

இப்படிப் பலவாறாகக் கொலை செய்தார், அந்தப் புண்ணியவான். ஒரு மகாகவி—அதிலும் கம்பன் இப்படிப் பாடுவானா என்பதை அவர் கொஞ்சமும் மூளையில் எண்ணிப் பார்க்கவில்லை. இதே காரணம் கொண்டுதான், திரு. டி. கே. சி. பதங்களைப் பிரித்து உண்மையான அர்த்தத்தை எல்லாரும் விளங்கும்படியாக எழுதுகின்றார்கள்.

தமிழ்மொழி எல்லாருக்கும் விளங்கவேண்டும் என்பதுதான் தமிழனது குறிக்கோள் அன்றி, இலக்கணத்தை வைத்துக்கொண்டு, முட்டாட்டா மனா என்று ஜாலவித்தை காட்டுவது தமிழனது ஜோலியல்ல.

திருவாளர் டி. கே. சியால்தான் இன்று தமிழ்நாட்டில் எத்தனையோ பேர், கம்பனை அறிய முடிந்தது. கம்ப ராமாயணம் தமிழனுக்கு, கம்பன் எழுதி வைத்த உயில் என்று திருவாளர் டி. கே. சி. சொல்வதோடு மட்டுமல்ல; தமிழன் ஒவ்வொருவனுக்கும் எடுத்து வழங்குகிறார் என்றால் அது மிகையாகாது.

திரு. டி. கே. சியைப் பின்பற்றுகிறவர்களும் தமிழை நன்கு அனுபவிக்கின்றார்கள். தமிழ் என்றால் ஏதோ வேதாந்த ரகஸ்யந்தானோ? என்று ஒரு காலத்தில், பயந்து கொண்டிருந்த நாம் கூட, இன்று திரு. டி. கே.

சரித்திரக் கதை.

# உண்மைத் தியாகி

(கே. ஸி. எஸ். சங்கரன்.)

சிவாஜியின் வீரர்களும், விஜயபுரி சுல்தானது வீரர்களும், ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டிருந்தனர். வாட்கள் ஒன்றோடு ஒன்று உராய்ந்து கொண்டிருந்தன; வேல் அம்புகள் பறந்து கொண்டிருந்தன; பனங்காய் சிவப்படுவதுபோல் சிரங்கள் வெட்டப்பட்டு, பூமியில் விழுந்து கொண்டிருந்தன; சிரங்களாகிய மலைகளிடையே, ரத்தஆறு பெருக்கெடுத்து, ஓடிக்கொண்டிருந்தது.

## 1

பனக்கலக் கோட்டைக்குள் ஒரு மஹாராஷ்டிர வீரன், தன் அறையில் அங்கும் இங்கும் உலாவிக் கொண்டிருக்கின்றனன். அக் கோட்டையைத் தான் விஜயபுரி வீரர்கள் முற்றுகையிட்டுக் கொண்டிருக்கின்றனர்.

அவ் வீரன் ஏதோ ஒரு சிந்தனையில் இருக்கிறான் என்பதை அவன் முகம் நன்கு விளக்கிக் காட்டியது. அவன்தான் மஹாராஷ்டிரச் சிங்கமாகிய சிவாஜிமன்னன். அவன் பின்வருமாறு கூறிக் கொண்டிருந்தனன்:—"என்னிடம் தற்பொழுது சொற்ப வீரர்களே இருக்கின்றனர். இவர்களின் உதவியைக்கொண்டு நான் எவ்விதம் மொகலாய வீரர்களைத் தாக்குவது? குளிர்காலம் நெருங்கியதும் போர் நின்றுவிடும் என்று எண்ணியிருந்தேனே. குளிர்காலமும் வந்து விட்டதே. போர் நிற்பதாகத் தெரியவில்லையே. இதனால் வெளியிலிருந்து உணவு வருவதும் கடினமாயிருக்கின்றதே. விஜயபுரி சுல்தானோ, மேன்மேலும் உதவிப்படையை மொகலாய வீரர்களுக்கு அனுப்பிக் கொண்டிருக்கின்றான். வெளியிலிருந்து உதவிக்காக வீரர்களைக் கொண்டு வருவது சுலபமான காரியமல்ல. ஒவ்வொரு நிமிடமும் ஆபத்து என்னை அணுகிக்கொண்டே இருக்கின்றது. நான் இச் சமயம் சுவற்றில் இருக்கும் பூனையின் நிலைமையை ஒத்திருக்கின்றேன். அம்மை பவானியின் அருள் இருந்தால் எல்லாம் மங்களமாக முடியும்." இத்துடன் அவ் வீரனின் சம்பாஷணை நின்றது. சில விநாடிகள் வரையில் அங்கு அமைதி பரவி இருந்தது. அவ்வமைதியைக் கலைத்துக்கொண்டு சிவாஜியின் வாயிலிருந்து, "ஆம்! அதுவே சரியான யோசனை!" என்ற

---

சியால்தான் தமிழை ரொம்பவும் அனுபவிக்க முடிகிறது என்றால், அது புகழ்ச்சிச் சொல்லல்ல; உண்மை அநுபவம்.

"தமிழ்நாடு தமிழருக்கே!" என்று பேசிக்கொண்டிருக்கிற திரு. ஈ. வே. ராமசாமி நாயக்கர், "தமிழனது முதல் வேலை, கம்பராமாயணத்தைச் சுட்டெரிப்பது தான்" என்கிறார். ஆனால், அவரைக் கண்டிக்க, ஆள் இல்லை. ஆனால், தமிழை வளர்க்கின்ற திரு. டி. கே. சியை எதிர்க்க ஆட்கள் இருக்கிறார்கள் என்று நினைக்கும் போது வியப்பாகத் தான் இருக்கிறது.

வார்த்தைகள் வெளிவந்தன. அவன் தன் அறையை விட்டு, வெளியே சென்றனன்.

2

நடு இரவு அருகிலுள்ள காடுகளிலிருந்து வரும், ஆந்தையின் அலறல் அடிக்கடி கேட்டுக்கொண்டே யிருந்தது. எங்கும் ஒரே இருளாய் இருந்ததினால், முகலாய வீரர்களின் கூடாரங்கள் கருங்குன்றுகள்போல் தென்பட்டன. முகலாய வீரர் சிலர் குடி வெறியினால் வாயில் வந்தவாறு உளறிக்கொண்டும், ஆடிக்கொண்டும் இருந்தனர்.

ஓர் கூடாரத்தில் முகலாய வீரர்களின் தலைவன், சில வீரர்களுடன் ஏதோ குசு, குசுவென்று பேசிக் கொண்டிருந்தனன். அதிலிருந்து, அத் தலைவன் ஏதோ இரகசிய ஏற்பாடு செய்து கொண்டிருக்கின்றனன் என்பது நன்கு விளங்கியது.

அச்சமயம் ஓர் வீரன் அவர்கள் இருக்கும் கூடாரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தனன். அவ்வீரன் கூடாரத்தை அணுகியதும், அங்கு காவல் கொடுத்துக் கொண்டிருந்த ஓர் இளம்பவீரன், "யாரது?" என்றனன். அதற்கு வந்த வீரன், "நான் ஒரு போர் வீரன். உங்கள் தலைவனைக் காணவேண்டும்" என்று கூறினான். உடனே அக் காவலன் உள்ளே சென்று தலைவனுடன் வெளியே வந்தனன் "ஆ! சிவாஜி மன்னரு? வாருங்கள்" என்று கூறி, தலைவன் வந்த வீரனை உள்ளே அழைத்துச் சென்றனன்.

தலைவன், சிவாஜிக்கு ஓர் ஆசன மளித்து, "மன்னரே! தாங்கள் இந் நடுநிசியில் என்னை நாடி வந்ததின் காரணத்தை அறியலாமோ" என்று கேட்டான்.

அதற்கு மஹாராஷ்டிரச் சிங்கம், "வீரர் தலைவ! உன்னுடைய வெற்றிப் ப்ரதாபத்தை சென்ற சில நாட்களாக நடந்த போரில் கண்டது முதல், என் மனம் உன்னைக் காணவேண்டுமென்ற ஆவலினால் இங்கு என்னை அழைத்து வந்தது. தவிர என்னிடம் அதிக வீரர்கள் இல்லை. இருந்தவர்களில் பலர் போரில் மாண்டு போயினர். இனி என்னால் உங்களை எதிர்த்துப் போர் புரிவதற்குச் சக்தியில்லை. ஆகையால் நான், இன்று முதல் ஒரு சிற்றரசனைப்போலக் கப்பம் கட்டிக்கொண்டு, வாழுவதாக உறுதி செய்து கொண்டிருக்கின்றேன்" என்று கூறினான்.

சிவாஜியின் வார்த்தைகளைக் கேட்டதும் தலைவன் திகைத்துப் போனான். அவன் அதை நம்பவில்லை. "வீராகிய நீங்களா இவ்விதம் செய்யத் துணிந்து விட்டீர்?" என்று கேட்டான். "ஆம்!" என்று சிவாஜி பதிலளித்து விட்டு, "நான் சென்று வருகிறேன். வந்து வெகுநேரமாகிவிட்டது. மற்ற விஷயங்களை நாளை உன்னிடம் வந்து தெரிவிக்கிறேன்" என்று கூறி, முகலாய வீரர் தலைவனிடம் விடை பெற்றுக்கொண்டு, கூடாரத்தை விட்டு, வெளியே வந்து இருளில் மறைந்தனன்.

இச்செய்தி முகலாய வீரர்களுக்கு எட்டியவுடன், அவர்கள் வெற்றியடைந்து விட்டதாக நினைத்துக்கொண்டு, கவலையின்றி நித்திராதேவியின் வசமாயினர்.

3

நிசப்தமான அவ்விரவில் வானைப் பிளந்துகொண்டு செல்லும்படி, திடீரென வெற்றி முழக்கம் கேட்டது. மஹாராஷ்டிர வீரர்களுடன், சிவாஜி மன்னன் விசாலக்கட்டம் என்னும் கோட்டையை நோக்கி வேகமாகச் சென்று கொண்டிருந்தனன். குதிரைகள் செல்லும் காலடிச் சப்தங்கள் பட படவென்று, இடி இடிப்பதுபோல் கேட்டுக்கொண்டிருந்தன.

அச் சப்தத்தைக் கேட்டு, முகலாய வீரர்கள் திடுக்கிட்டெழுந்தனர். அதற்குள் சிவாஜி பாதிவழி சென்று விட்டனன். சிவாஜி தங்களை ஏமாற்றிச் சென்றதைக் கண்ட, முகலாயர் என்ன செய்வதென்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தனர்.

அச் சமயம் பாஜல்கான் என்னும் வீரன் சினங்கொண்டு, "தலைவ! நான் இது வரையில் தங்களுடைய உத்திரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என் தந்தை அப்சல்கானைக் கொன்ற, சிவாஜியைப் பழிக்குப் பழி வாங்காவிடில் நான் ஒரு மைந்தனா? என்னுடன் பரிவீரர் சிலரை அனுப்புங்கள். அவன் தலையைப் பூமியில் உருளும்படி செய்து வருகிறேன்" என்று கூறினன்.

அதைக் கேட்ட முகலாய வீரர்களின் தலைவன் அவனது ஆண்மையைக் கண்டு, "பாஜல்கான்! உனது தைரியமே உனக்கு வெற்றியைத் தரும்" என்று கூறி அவனை அனுப்பினன்.

உடனே பாஜல்கான் தன் குதிரையில் ஏறிக்கொண்டு, பரிவீரர்கள் பின் தொடர, சிவாஜி சென்ற வழியைப் பின்பற்றிச் சென்றான்.

பாஜல்கான், சிவாஜியை நெருங்கிக் கொண்டிருந்தனன். இன்னும் ஒரு விநாடிதான் இருக்கிறது. சிவாஜி எதிரிகளின் கையில் அகப்படும் நிலையில் இருந்தனன். தன் நிலைமையை உணர்ந்த சிவாஜி, பாஜி தேசபந்து என்னும் வீரனை நோக்கி, "நண்ப! இச்சமயம் நீதான் என் உயிரைக் காப்பாற்றவேண்டும்" என்று கூறி, சில வீரர்களை அவனுக்குத் துணை செய்ய நிறுத்தி விட்டு, சிவாஜி எஞ்சியுள்ள வீரர்களுடன், விசாலக் கட்டத்தை நோக்கிச் சென்றனன்.

4

பாஜி தேசபந்துவைப்பற்றி சில மொழிகள் கூறுவோம்.

ஒரு சமயம், சிவாஜியும் பாஜி தேசபந்துவும் ஒருவரை ஒருவர் சந்தித்துப் போர் செய்தனர். சிவாஜி பாஜியைச் சாதாரண மனிதன் என்று நினைத்திருந்தனன் எனவே, இருவரும் வாள் ஏந்திச் சமர் செய்கையில், சிவாஜி அலக்ஷியமாகச் சண்டை செய்தனன். அதைக் கண்ட பாஜி சிவாஜியைத் திடீரெனத் தாக்கினன். சிவாஜி தன்னைக் காத்துக்கொள்ள, தன் சக்தியினால் அவன் எதிர்ப்பதைத் தடுத்தான். இருவர் வாளும் உராய்ந்த பொழுது, சிவாஜியின் வாள் "பட்" என்று ஒடிந்து விழுந்தது. அதைக் கண்ட சிவாஜி பாஜியின் அருகில் சென்று, அவனைத் தட்டிக்கொடுத்து, "பாஜி! நான் உன்னைச் சாமானிய மனிதன் என்றே நினைத்திருந்தேன். இன்று நடந்த வாட்போரிருந்து என் தப்பிதத்தை உணர்ந்தேன். இன்று

முதல் நாம் இருவரும் உயிர்த்தோழர்களாய் இருப்போம்'' என்று கூறினான்.

அன்று முதல் அவர்கள் கொண்ட நட்பு வளர்பிறைச் சந்திரனைப் போல வளர்ந்து வந்தது.

பாஜல்கான் தன்னைப் பின்பற்றிச் சிறை செய்ய வந்ததைக் கண்ட சிவாஜி தன்னைக் காப்பாற்றும்படி பாஜியை வேண்டவே, பாஜியினால் அவ்வுதவியைத் தட்டமுடியாமல் போயிற்று. பாஜியின் மனதில் ஓர் எண்ணம் மின்னல்போல் தோன்றி மறைந்தது. தன் உயிரைக் கொடுத்தாவது சிவாஜியைக் காப்பாற்றுவது என்று, பாஜி தீர்மானித்தனன்.

பாஜி நின்றிருந்த இடம் ஒரு குறுகலான பாதை. அப் பாதையின் இரு பக்கங்களிலும் உயர்ந்த மலைச்சிகரங்கள் வானளாவி நின்றன. பாஜி தன் வீரர்களை அங்கு ஒழுங்காக நிறுத்தித் தானும் ஒரு வாளைக் கையிலேந்திக்கொண்டு நின்றனன்.

'இன்னும் சில நிமிடங்களில் சிவாஜியைச் சிறை செய்துகொண்டு போய் விடலாம்' என்ற எண்ணத்துடன் முகலாயவீரர் பாஜி நிற்கும் குறுகலான பாதையினருகில் வேகமாக வந்தனர். அங்கு பாஜி நின்றிருப்பான் என்பதை அவர்கள் எதிர்பார்க்கவில்லை. ஆகையால் அவர்கள் பாஜி தேசபந்துவைக் கண்டதும் திகைத்துப் போனார்கள். அவர்களைக் கண்ட பாஜி, ''வீரர்களாயின் இங்கு வாருங்கள்'' என்று கூவினன்.

முகலாய வீரர் கொதித்தெழுந்து மஹாராஷ்டிர வீரர்களைத் தாக்கினார்கள். பாஜி தன் வீரர்களைத் துரிதப் படுத்திக்கொண்டே தானும் வீரம் விளைத்துச் சண்டை செய்தனன். தன் தேக முழுவதும் ரத்தப் பெருக்கு எடுத்து ஓடுவதையும் கவனியாமல், பாஜி முகலாய வீரர்களைக் கொய்து தள்ளிக் கொண்டிருந்தனன்.

மஹாராஷ்டிர வீரர்களில் சிலர் இறந்து விடவே, பாஜி எஞ்சியுள்ள வீரர்களை நோக்கி, 'நண்பர்களே! கலங்கவேண்டாம். உங்கள் உயிர் உள்ள வரையில் பின்னடையாதீர்கள். நமது வேந்தன் சிவாஜி வீரன் விசாலக் கட்டத்தை அடைந்ததற்கு அடையாளமாக மூன்றுமுறை பீரங்கிச் சப்தம் கேட்கும்'' என்று கூறி அவர்களை உற்சாகப்படுத்திக்கொண்டே சண்டை செய்தனன்.

போர் நடந்து கொண்டிருக்கும் பொழுது ஒரு முகலாய வீரனின் வாள் பாஜி தேசபந்துவின் மார்பில் பாய்ந்து ஊடுருவிச் சென்றது. பாஜி கீழே விழுந்தனன். அவன் உயிர் துடித்துக் கொண்டிருந்தது. அச் சமயம் மூன்று முறைப் பீரங்கிச் சப்தம் கேட்டது. அச் சத்தத்தைக் கேட்டவுடன் பாஜியின் முகம் மலர்ந்தது. ''என் நண்பன் பிழைத்தனன். நான் என் கடமையை நிறைவேற்றி விட்டேன்,'' என்று கூறினான். அந் நிமிடமே அவன் ஆவி அகன்றது.

மஹாராஷ்டிர வீரர்கள் உடனே அவன் உடலை எடுத்துப்போய் சிவாஜியின் முன்னிலையில் வைத்தனர். அதைக் கண்ட சிவாஜி அவ்வுடலின் மீது விழுந்து, இறந்த நண்பனைத் தழுவிக்கொண்டு, ''பாஜி! எனக்காக உன் உயிரையும் பொருட்படுத்தாமல் போர் செய்தனையே! நீயே என் உத்தம நண்பன்! நீயே உண்மைத் தியாகி!'' என்று கதறினான்.

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



புருஷோத்தமன்:—பிறகு என்னவா? நான் அவனுக்குக் குறிப்பிட்ட தினத்தில் பணத்தைக் கொடுக்க முடியவில்லை. ஒரு வாரத்திற்கு முன்னாலேயே, 6-வருஷக் கெடு முடிந்து விட்டது. அதற்காக, நான் சொன்னபடி தற்கொலை செய்து கொள்ளாததால் அவன் என் குழந்தையைக் கொண்டு போய் விட்டான். தவிர,—என் மனைவியையே கொலை செய்தும் விட்டான்.—ஆகையால் நான் சரியாய் 9 மணிக்கு அத் தோப்பிற்குப் போய்—நான் தற்கொலை செய்து கொண்டு விடுவதாக, அவனிடம்—(முகமூடியிடம்)—ஒப்புக் கொள்ளப் போகிறேன். பின், வேறு வழியே யில்லை. அவ்வளவு தான்!"

என்று சொல்லி முடித்தான்.

அப்பொழுது புருஷோத்தமன், பைத்தியம் பிடித்தவன் போலிருந்தான். அவனுக்கு தன் மனைவி இறந்த விஷயம், அவ்வளவு துக்கத்தை உண்டு பண்ணிற்று போலும்! அரசகேசரி—அதாவது கருணாகரன், "புருஷோத்தமா! கவலைப்படாதே, உன்னை இந்த ஆபத்திலிருந்து விடுவிக்க எனக்கொரு யோசனை தோன்றுகிறது," என்று நிதானமாகவும், கம்பீரமாகவும் சொன்னான். புருஷோத்தமன் அதிருப்தியுடனும் ஆச்சரியத்துடனும் தலையை யசைத்தான். "உம், உம்! முடியாது. முகமூடியை அசைக்க, யாராலும் முடியாது—அவன் சில விஷயங்களில்—வீரமார்த்தாண்டனை விடப் பயங்கரமாக விருக்கிறான்" என்று சொன்னான்.

அப்பொழுது கருணாகரன் வெகு அலட்சியமாகச் சிரித்தான்! அந்தச் சிரிப்பில் எவ்வளவு அர்த்தங்கள்!—பிறகு, கருணாகரன், புருஷோத்தமனைப் பார்த்துச் சாதாரணமாக, "முகமூடி, வீரமார்த்தாண்டனை விட பயங்கரமானவனாகவோ, அல்லது கெட்டிக்காரனாகவோ, இருக்கலாம்! ஆனால் வீரமார்த்தாண்டன் முகமூடிக்கு வேண்டிய அளவு பாடம் கற்பித்தாய் விட்டது. ஆகையால் இப்பொழுது முகமூடி, வீரமார்த்தாண்டனைப் பற்றிக் கவலையுள்ளவனாக விருக்கிறான்! இப்போது நான், சொல்வதைக் கேள்!

அதாவது, நீ நேராக இங்கிருந்து முகமூடியிடம் சென்று "வீரமார்த்தாண்டனை உயிருடன் பிடித்து அவனிடம் ஒப்புவிப்பதாகவும், அதற்குப் பதிலாக, நீ அவனிடம் கொடுத்திருக்கும் கடிதத்தையும், உன் குழந்தையையும் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்றும்" கேள்.

"அவனுக்கு இப்பொழுது வீரமார்த்தாண்டனைப் பற்றிய கவலை அதிகமிருப்பதால் இதற்குக் கட்டாயம் ஒத்துக் கொள்வான். அப்பொழுது நீயும் விடுபடலாம்—உன் குழந்தையுடன்.—மீதி விஷயங்களை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றான்.

புருஷோத்தமன் ஆச்சரியத்தினால் ஆவென்று வாயைப் பிளந்தான்! பிறகு, "அப்பொழுது, வீரமார்த்தாண்டன் என் உயிருக்குப் பதில் தன் உயிரைத் தியாகம் செய்யத் தயாரா யிருக்கிறா னென்பதாக வைத்துக் கொள்வதா?" என்று கேட்டான்.

கருணா:—"ஆம்! வீரமார்த்தாண்டன் தயாரா யிருக்கிறான்!"

அப்பொழுது புருஷோத்தமனின் கைகள் இவனையும் அறியாமல், கருணாகரனின் கரங்களை அழுத்திப் பிடித்தன. நன்றியறிதலின் மிகுதியினால் அவன் கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்கி வழிந்தது.

புருஷோ:—"நான் இப்பொழுது என்ன செய்ய வேண்டும்?"

கருணா:—"சற்று நேரத்திற்கு முன்பு தான் நான் அதே தோப்பில் சில ரைச் சுட்டுவிட்டு வந்திருக்கிறேன். ஆகையால் அங்கே இன்னும் போலீஸ் காரர்கள் சூழ்ந்து கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன். ஆகையால் நீ சற்று தூரத்திலேயே உன் காரை நிறுத்திக்கொண்டு, மெதுவாக நடந்து ஒருவருக்கும் தெரியாமல் அவ் வீட்டிற்குள் புகுந்து, நான் சொன்னதை முகமூடியினிடத்தில் சொல்லி, அவன் என்ன பதில் சொல்லுகிறான் என் பதை எனக்குத் தெரிவி. நான் இன்னுங் கொஞ்ச நேரத்தில 'பாஸ்கர விலாஸி'ல் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன்! என்ன?" என்று பல விஷயங்களைக் கூறி முடித்து, ஒரு கேள்வியைக் கேட்டான்.

புருஷோ:—"ஆனால் முகமூடி, உன்னைக் கொண்டுவரச் சொல்லி விட்டுப் பிறகு மோசம் செய்தால்?"

கருணா:—"அப்பொழுது நான் வட்டியும் முதலுமாகப் பார்த்துக் கொள்வேன்."

அப்பொழுதும் கருணாகரன் ஒரு அலட்சியச் சிரிப்புச் சிரித்தான்!

புருஷோ:—"சரி, என்னால் முடிந்தவரையில் நான் முயற்சி செய்கிறேன்."

என்று அரைமனதோடு கூறினான்.

கருணா:—"நல்லது! நான் இப்போது இங்கேயே இறங்கிக் கொள்ளுகிறேன்! முகமூடி, நான் சொன்னதற்கு ஒத்துக்கொண்டால், இன்னும் அரைமணி நேரத்தில் வீரமார்த்தாண்டனுடன் வருவதாகச் சொல்லி விட்டு உடனே என்னை வந்து பாஸ்கர விலாசில் வந்து பார். நான் அங்கு தயாராகக் காத்துக் கொண்டிருப்பேன். தெரிகிறதா!

என்று சொல்லி காரை விட்டு இறங்கினான். பிறகு, தன் கைக் கடியாரத்தைப் பார்த்த வண்ணம், "இன்னும் 9 அடிக்க 3 நிமிஷங்கள் இருக்கின்றன. ஆனால், நீ சற்று முன்னதாகவே சென்று அங்கு காலத்திற்கும், இடத்திற்கும் தக்கபடி நடந்து கொள். நான் உனக்கு ஜெயத்தை விரும்புகிறேன்" என்று சொல்லி வாய் மூடு முன் புருஷோத்தமனின் கார் நகர்ந்தது.

* * * *

புருஷோத்தமனின் கார் கண்ணை விட்டு மறைந்ததும், கருணாகரன் நேராகப் பாஸ்கர விலாசை நோக்கித் துரிதமாக நடந்தான். அப்பொழுது

அவன் மனம் ஆயிரமாயிரமாகிய விஷயங்களை எண்ணிக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது நேரத்தில், இரண்டிலொன்று புருஷோத்தமனின் மூலமாகத் தெரிந்து கொள்ளலாமென்று நினைத்தான்.

வெகு சீக்கிரத்தில் பாஸ்கர விலாஸை யடைந்த கருணாகரன் தன் அறையை யடைந்தான். 'புருஷோத்தமன் எந்த நிமிஷத்திலும் வந்து விடுவானாகையால், தான் அதற்குள் தயாராக விருக்க வேண்டுமென்று நினைத்தான். ஆகையால் உடனே தன் உடைகளைக் களைந்தெறிந்து மாற்று உடைகளை யணிந்து கொண்டு, மறுபடியும்,—சாப்பாட்டை முடித்துக் கொள்ள வெண்ணி,—கீழே இறங்கினான்.

வெகு சீக்கிரத்தில் தன்னறையை விட்டுக் கிளம்பிய கருணாகரன், தன் சாப்பாட்டைத் துரிதமாக முடித்துக்கொண்டு மீண்டும் மேல் நோக்கி நடக்க ஆரம்பிக்கையில் அவன் மனதில் திடீரென்று ஒரு எண்ணம் மூண்டது. அவன் டெலிபோன் மூலமாகச் சீனுவைக் கூப்பிட்டு, 'மனோன்மணி எப்படி யிருக்கிறாள்' என்று அறிந்துகொள்ள வெண்ணினான்.

'ஏனெனில், அன்று காலைப் பத்திரிகையில் 'அரசகேசரியின் மரணம்' என்ற தலைப்பின் கீழ் எழுதப்பட்ட விஷயத்தை அவளும் படித்திருக்கலாம்.—அப்படியானால் அவளுடைய அபிப்பிராயம் அதைப்பற்றி என்னவாயிருக்கும்!—ஒரு வேளை நிஜமென்று அந்த விஷயத்தை நம்பிக் கலவரமடைந்திருப்பாளோ! அல்லது சீனுவின் மூலம் உண்மையைத் தெரிந்து கொண்டிருக்கலாமோ!—அப்படி சீனுவின் மூலம் உண்மையைத் தெரிந்து கொண்டால் அவள் சும்மா யிருக்க மாட்டாளே!'—

என்றெல்லாம் கருணாகரன் எண்ணினான். அப்பொழுது தான் கருணாகரனுக்குத் 'தான் மனோன்மணியிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டது' தவறு என்று தோன்றிற்று.

ஆகையால், உடனே நேராக டெலிபோன்கள் வைக்கப்பட்டிருந்த மூலையை நோக்கி நடந்தான் கருணாகரன். டெலிபோனண்டை நின்று கொண்டிருந்த காவற்காரனை விளித்து, இங்கிருந்து 20 மைல் தூரத்திலுள்ள தன்னிருப்பிடத்தின் நம்பரைக் கூறி, அந்த நம்பரைக் கூப்பிடுமாறு விளித்தான். வெகு சீக்கிரத்தில் சீனு மறுபக்கத்திலிருந்து பேசினான்.

சீனு:—தங்களுக்கு என்ன விஷயம் தேவையா யிருக்கிறது. நான் அங்கே வரவேண்டிய வேலை ஏதாவது எனக்கு இருந்தால் தெரிவியுங்கள். உடனே அங்கு வருகிறேன்!

கருணா:—வேண்டாம்! இங்கு காரியங்கள் எல்லாம் அநேகமாக முடிந்து விட்டன. இன்னும் மீதி யிருக்கும் சிறிது காரியத்தையும் முடித்துக் கொண்டு நானே அங்கு வந்து விடுவேன். அதிருக்கட்டும்! மனோன்மணி எப்படி யிருக்கிறாள்? ஆபீஸிற்கு வந்து உன்னிடம் என்னைப் பற்றி ஏதாவது விசாரித்தாளா?

இந்தக் கேள்விக்கு உடனே பதில் கூறாமல் சீனு சற்றுத் தயங்கியது கருணாகரனுக்குத் தெரிந்தது. உடனே 'உம்! என்ன விஷயம் நடந்தது, சீக்கிரம் கூறு! அவள் அங்கு வந்து விசாரித்தாளா? என்ன? உம்!" என்றான்.

# நூதன மார்வாடி

சீனு:—தயவு செய்து தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும். மனோன்மணி இவ்விதம் வந்தாள். இங்கே அவள் வந்து நடந்து கொண்ட மாதிரியில், நான் அவளுக்கு உண்மையைக் கூறிவிட வேண்டியதாயிற்று. அதாவது காலைப் பத்திரிகையில் 'அரசகேசரியின் மரணம்' என்ற செய்தி வெளியாகிய, அரைமணி நேரத்திற்கெல்லாம் மனோன்மணி நீவ்விடம் வந்து, என்னைப் பார்த்து 'பேப்பரில் வந்திருக்கும் விஷயம் 'பொய்யா, நிஜமா' என்று கேட்டாள். அப்பொழுது அவள் பைத்தியம் பிடித்தவள் போலிருந்தாள். அவளது முகத்தில் கலவரக் குறிகள் நிரம்பியிருந்தன. அதற்கு நான், 'எனக்கொன்றும் நிஜமாகத் தெரியாது. நானும் அரசகேசரி மரணமடைந்து விட்டார் என்றே கருதுகிறேன்' என்று சொன்னேன். அடுத்த க்ஷணம் அவள் செய்த காரியம் எதிர்பாராததாயிருந்தது. அவள் திடீரென்று மேஜையின் டிராயரைத் திறந்தாள். 'அவள் எதற்காகத் திறக்கிறாள்' என்று ஆச்சரியத்துடன் நான் கவனித்துக் கொண்டிருக்கையிலேயே அவள் மேஜை டிராயரிலிருந்த ரிவால்வரைச் சடேரென்று எடுத்தான்..................."

கருணா:—"முட்டாளே! சீக்கிரம் கூறு."

இப்பொழுது கருணாகரனுக்கு நிஜமாகவே பயர் தோன்றிற்று. அந்த ஒரு நிமிஷத்தில் அவனுடைய மனம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிற்று. ஆகையால் இப்பொழுது சீனுவிடம் அன்பாகவும் நிதானமாகவும் பேச விரும்பவில்லை.

சீனு:—(தொடர்ந்து) "ரிவால்வரை, எடுத்த அவள் அதை என் தலைக்கு நேராகக் குறி வைத்துப் பிடித்துக்கொண்டு, 'சீனு! நீ இப்பொழுது சொல்வது முழுவதும் பொய் என்று நான் அறிவேன். ஏனெனில் அரசகேசரி நிஜமாகவே இறந்திருந்தால், நீ இவ்வளவு, நிதானமாகவும், கலவரமின்றியும் இருக்கமாட்டாய். ஆகையால் இதில் ஏதோ விஷயம் இருக்கத்தான் வேண்டுமென்று நான் நினைக்கிறேன். நீ இப்பொழுது மரியாதையாக அரசகேசரி இருக்குமிடத்தைப்பற்றி எனக்குக் கூறவேண்டும். அப்படிக் கூறத் தவறினால், இதோ இத் துப்பாக்கியிலிருக்கும், ஒரு குண்டால் உன்னைக் கொலை செய்து விட்டு, மறு குண்டால் என்னையும் மாய்த்துக் கொள்வேன். அப்புறம், அவர் தன் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும். உம்," என்று என்னை அதட்டினாள். உடனே நான்................"

கருணா:—"நீ அவளிடம் நான் கருணாகரன் என்ற மாறு பெயரோடு, வந்து, இங்கு பாஸ்கர விலாஸில் தங்கியிருப்பதாகக் கூறி விட்டாயல்லவா?"

சீனு:—ஆம்! தயவு செய்து என்னை மன்னித்துக் கொள்ள வேண்டும். எனக்கு என் உயிர் போனாலும் கவலையில்லை. ஆனால் அவள் என்னைக் கொலை செய்து விட்டுத் தானும் தற்கொலை செய்து கொள்ளுவதாகக் கூறினதால் தான், நான் கவலைப்பட்டேன். ஆகையால் தான் அவளிடம் நான் உண்மையைக் கூறினேன். இது தவறானால் என்னை மன்னியுங்கள்."

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சித்திரபானுஸு ஆடிமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865
பசலி 1352, கொல்லமாண்டு 1117, ஹிஜரா 1361,
இங்கிலீஷ் 1942ஸு ஜூலைமீ—ஆகஸ்டுமீ

| ஆடி | ஜூலை | வாரம் | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வியா | திரு34-12 | ஆயி6-1 | சி6-1அ | தக்ஷிணாயன புண்யகாலம் |
| 2 | 17 | வெள் | சது 4-47 | மக8-25 | ம8-25சி | கரிநாள், மாசசதுர்த்தி |
| 3 | 18 | சனி | பஞ்34-12 | பூர10-48 | சி10-48ம | ஸ்கந்த பஞ்சமி, மாடுவாங்க |
| 4 | 19 | ஞா | சஷ்32-23 | உத்11-25 | அ60 | கூர்ம சஷ்டி [ துண்ண |
| 5 | 20 | திங் | சப்29-24 | அஸ்10-47 | சி10-47பி | சீமந்தம், கா துருத், மருந் |
| 6 | 21 | செவ் | அஷ்25-11 | சித்9-1 | சித60 | திதித்துவயம் |
| 7 | 22 | புத | நவ20-24 | சுவா6-36 | சித்60 | மாடு வாங்க, புது கணக்கு |
| 8 | 23 | வியா | தச15-37 | விசா3-37<br>அ59-24 | சி3-37பி | சிம்மாயனம் கா-29 15,<br>லக்ஷ்மீ விரதாரம்பம் |
| 9 | 24 | வெள் | ஏகா9-36 | கே55-12 | ம55-12அ | வியாதியர் குளிக்க |
| 10 | 25 | சனி | து3-35<br>திர57-36 | மூல51-1 | சித்60 | சனிப் பிரதோஷம், விஜய<br>பார்வதி விரதம் கரிநாள் |
| 11 | 26 | ஞா | சது51-35 | பூரா46-47 | சி46-47அ | காரி நாயனர் |
| 12 | 27 | திங் | ப○45-36 | உத்43-12 | ம43-12அ | வியாஸ பௌர்ணமி |
| 13 | 28 | செவ் | பிர40-11 | திரு40-11 | சித்60 | |
| 14 | 29 | புத | துதி35-23 | அவி37-48 | பி37-48சி | |
| 15 | 30 | வியா | திரு31-48 | சத36-1 | ம36-1சி | |
| 16 | 31 | வெள் | சது29-25 | பூர34-47 | சித60 | |
| 17 | 1942ஸு ஆகஸ்டுமீ 1 | சனி | பஞ்28-11 | உட்35-25 | சி35-25ம | |
| 18 | 2 | ஞா | சஷ்28-11 | ரே37-49 | அ37-49சி | |
| 19 | 3 | திங் | சப28-48 | அசு40-13 | சித்60 | |
| 20 | 4 | செவ் | அ31-11 | பர44-25 | சித்60 | |
| 21 | 5 | புத | நவ34-48 | கி※49-11 | அ49-11சி | |
| 22 | 6 | வியா | தச39-1 | ரோ55-12 | மர60 | |
| 23 | 7 | வெள் | ஏகா43-47 | மிரு60 | சித்60 | |
| 24 | 8 | சனி | து48-37 | மிரு1-48 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 25 | 9 | ஞா | திர53-23 | திரு8-25 | சித்60 | பிரதோஷம், மருந் துண்ண |
| 26 | 10 | திங் | சது57-25 | புன14-23 | அ14-23சி | மாச சிவராத்ரி |
| 27 | 11 | செவ் | அ●60 | பூச19-48 | சித60 | சர்வத்திர அமாவாசை |
| 28 | 12 | புத | அமா1-13 | ஆயி24-1 | சித்60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 29 | 13 | வியா | பிர3-36 | மக27-36 | சி27-36அ | சந்திர தரிசனம் |
| 30 | 14 | வெள் | துதி4-13 | பூர30-1 | ம30-1சி | சுவர்ண கௌரி பூஜை |
| 31 | 15 | சனி | திரு3-36 | உத்30-36 | மர60 | தூர்வா கணபதி விரதம் |
| 32 | 16 | ஞா | சது1-48<br>பஞ்59-23 | அஸ்30-1 | அ30-1சி | சிம்மரவி கா-53-3, அவமா<br>கம், சீமந்தம், புமசவனம் |

| | | | |
|---|---|---|---|
| | | சனி | பு-சு குரு |
| கே | 5-சிம்-அங்<br>9-கட-புத<br>26-சிம்-புத | | சூரி அங் |
| | | | ராகு |
| | | | |

Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,
At The "Ananda Bodhini" Press,
No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.

நவீன தமிழ் இலக்கியத்தில் ஒரு பெரிய
புரட்சியை யுண்டுபண்ணிய
"ஜீவா"வின்

# உயிரோவியம்

## (ஒரு உயர்ந்த காதல் சித்திரம்.)

தமிழ்நாட்டுச் சகோதர சகோதரிகள் பெரும்பாலோர் 'பிரசண்ட விகட'னில் தொடர்ந்து படித்து மகிழ்ந்து பாராட்டிய இச் சிறந்த கதை விரிவாகச் செப்பஞ் செய்யப்பெற்று, இப்போது புத்தக வடிவில் புத்தழகுடன் வெளிவந்திருக்கிறது.

"இதுகாறும் தமிழன்னையின் திருமேனியிலேயே கிடையாத ஒரு எழில்வாய்ந்த ஆபரணம் இது..........படித்துக் கொண்டு போவோரை ஒரு குலுக்குக் குலுக்குகின்றது அதன் முடிவு. ஏனெனில் இதுவரை எந்த கதாசிரியராலும் காணாத முடிவு.........ஒரு முறையல்ல; பல முறை படித்து இன்புறவேண்டிய கதை."

இவ்விதம் ஒரு சிறந்த சிறுகதை எழுத்தாளரே வியந்து புகழ்ந்திருக்கிறார். அவர்மட்டுமல்ல; இக் கதையைப் படித்த அறிஞர்கள், எழுத்தாளர்கள் அனைவருமே ஏகோபித்துப் பலபட பாராட்டி யிருக்கிறார்கள்.

இதன் விலை அணா 12. (தபாற்செலவு அணா 5.)

# கவர்னரும், ராஜாஜியும்

இம்மாகாண நிர்வாகத்தின் உயர்தர ஸ்தானத்தில் இருந்த கவர்னர் எர்ஸ்கின் பிரபுவும், பிரதம மந்திரியாயிருந்த கனம் ராஜகோபாலாச்சாரியார் ஆகிய இரு பிரமுகர்களுடைய வரலாறுகளும், குண தோஷங்களும், அவர்கள் பதவியில் இருந்தகாலத்தில் செய்த காரியங்களின் நிலைமையான விமர்சனமும் விவரமாக இதில் விளக்கப்பட்டிருக் கின்றன. மூன்று அழகிய படங்களுடன் கூடியது.

இது, சிறந்த ஆங்கில நூலாசிரியர் ஒருவரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்டதன் மொழிபெயர்ப்பு.

இதன் விலை அணா 6 தான்.

---

:: "ஆனந்தபோதினி" ஆபீஸ், ::
தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

களைக் கண்டித்து தினந்தோறும் மலத்தை தாராளமாய்ப் போக்குவதில் இந்தலேகிய செந்தூரங்களே முதன்மையானது யென்பதை நாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபார குணம் தெரியவரும். தவிர யாங்கள் இம்மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவரே தான் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் இந்த லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும். இது தவருது. இவற்றைத் தருவித்து நண்பர் எண்ணிக்கையாகச் சாப்பிட்டு 10-நாளைக்குள் குணம் இல்லாவிடில் உடனே தெரியப்படுத்தினல் கட்டாயம் இவற்றிற்கு வாங்கிய பணம் வாப்ஸ் செய்யப்படும். தவிர மேற்காட்டிய நோய்களை உடையோர் 48-நாட்கள் சாப்பிடுவார்களேயாளுல் அவை முழுதும் நீங்கிவிடும். அப்படி நீங்கிக் குணம் ஏற்படாவிடில் நாங்கள் அதற்கு உத்தரவாதிகளாவோம். யாங்கள் இவ்வளவு அருமையான லேகிய செந்தூரங்களை எவ்வளவோ சிரத்தையுடன் கஷ்டப்பட்டு முடித்துப் பரோபகாரார்த்தமாக வெளியிட்டோம். இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களுக்குப் பொன்மெடல், வெள்ளிமெடல், பெற்றதல்லாமல் ஆயிரக் கணக்கான யோக்கியதாம்ச பத்திரங்களும் பெற்றிருக்கின்றோம். ஆதலின் எமது லேகிய செந்தூரங்கள் நாம் சொன்னபடி குணத்தைக் கொடுக்கும் என்பதைப்பற்றி ஜவாப்தாரியாக யிருக்கக் காத்துக் கொண்டிருக்கிறோம்; இது உண்மை. இவற்றை ஒரேதரம் தருவித்துப் பாருங்கள்; எமது உண்மை விளங்கும்.

வாதாதிக்க தோஷத்தினுலாவது, துராப்பியாசத்தினுலாவது, அதிக மனக்கவலையினுலாவது, அடிக்கடி உண்டாகும் நோயினுலாவது, மற்றெந்த காரணத்தினுலாவது பலமிழந்தவர்கள் எண்ணிக்கையாக டி. லேகிய செந்தூரங்களைப் புசிப்பார்களாளுல் இவை தேகாரோக்கியம், வலிமை, அழகு முதலியவற்றை அவர்க்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யுமென்பதில் தடையில்லை. வெளியூர்க் கனவான்கள் இந்த லேகிய செந்தூரங்களில் முழு நம்பிக்கை வைத்து ஒரே ஒருதரம் இவற்றைப் பரீக்ஷிப் பார்களாளுல், அவர்கள் அவசியம் ஆனந்தமடைவார்கள்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பலகாரங்களையும் நீக்குதலின்றி சாப்பிடலாம். மருந்து சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும் ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு, கறி, மார்க்கண்ட ரூப்பு, இவைகளை அதிகமாகப் பசியைத் தணிக்கக்கூடிய விதமாகத் தாமதம் செய்யாமல் சாப்பிடல் வேண்டியது. இவற்றைப் புசிக்கும் போதெல்லாம் பலகாராதிகளை சாப்பிடல் வேண்டும். தயிர், பால் முதலியவைகள் எவைகளாயிருந்தாலும் சந்தேகமின்றி சாப்பிட்டு வரலாம்.

இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களை மட்டும் ஒருவர் தருவித்து எண்ணிக்கையாக 48-நாள் சாப்பிடுவாரே யாளுல் இவை தேகத்தில் வற வற, மேகமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி அவர் தேகமானது வலுத்துப் புதிய ரத்தம் பாவி தன் வாழ்நாள் பரியந்தம் இளைக்காமலிருக்கும். இவற்றைப் புருஷன் பெண்சாதி இருவரும் ஏககாலத்தில் ஒற்றுமைபடித்துச் சாப்பிட்டு வந்தார்களேயாளுல், அவர்க்கு உதிக்கும் மக்கள் தீர்க்க

தேஜஸோடு தோன்றுவார்கள். இது உண்மை. இதை அதிகம் எழுதுதல் அனுவசியம். இந்தியா, ஸிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1-12-0. போஸ்டேஜ் அணா 8. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோர்க்கு போஸடேஜ் உள்பட ரூ.4.

பர்மா, பினங்கு, சிங்கப்பூர், செட்டால் முதலிய அயல்நாடுகளுக்கு 24 நாள் சாப்பிடக்கூடிய மருந்து விலை ரூ. 1-12-0. தபாற்கூலி ரூ. 1-4-0.

48-நாள் மருந்து வாங்குவோருக்கு போஸ்டேஜ் உள்பட ரூபா 5-8-0 சிங்கப்பூர், பினங்கு, மலாக்கா முதலிய வெளிநாடுகளுக்கு வி. பி. ஆர்டர் இருந்தாலும் முன்பணம் அனுப்பாதவர்களுக்கு மருந்து அனுப்பப்படமாட்டாது.

**விலாசம்:—லேகியம் டிபோ,**
**நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.**

---

## நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும். மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகாமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டுவர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கிவிடும். புட்டி 1-க்கு அணா 4. வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா 1—8—0.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

**பட்டவுடனே விஷம் பறக்கும்! அழுதவன் சிரிப்பான்!!**

**இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.**




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பாய் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நான்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும். விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபாற் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

**ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனாம், வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.**

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி, மேக தாமரை, மேக நமைச்சல், மேக ரணம், மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லாவகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொரு முறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண விவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை தேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

**னலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த் தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



# கூந்தல் வளரும் துளி



இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது; சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும். புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.

# ருதுக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும், ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினலாவது வேறு எந்தக் காரணத்தினலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனல் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினலாவது, புழு வெட்டினலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்; இதனல் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கைகால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும், தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தைத் தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேகதிடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும்பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

## காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு தலைசிறந்த ஔஷதமாகும். (இம் மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. பத்தியமின்றி சாப்பிடலாம்.

30 நாள் 60 வேளை மருந்து விலை ரூபா 2—8—0.

## எலிக்ஸ்ரைன்

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும்.

20 நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக்கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூபா 2—4—0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, நைனியப்ப சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்-

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி [illegible] | [illegible] | [illegible] |
| அற்புத நவ[illegible]மபை ... | 1 | 0 |
| அகட வி[illegible] வி[illegible] விநோதம் | 0 | 10 |
| மோட்டி[illegible]கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கி..வன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திஸிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| ராஜமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனாமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணாகானன் ஞானநேத்திரி ... | 0 | 8 |
| மஹேரன்மணி கதை ... | 0 | 8 |
| கோ[illegible]வல்லி கதை ... | 0 | 8 |
| வி[illegible]வல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்டி மறந்த கதை ... | 0 | 5 |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.